உ

பரமபதி துணை.

மகா மகத்துவம் பொருந்திய

அகத்தியர் திருவாய்மலர்ந்தருளிய

# தத்துவம் 300.

இஃது

திருமங்கலம் தாலூகா, பண்ணிக்குண்டு

கிராமம், மு. சு. கு.

சுந்தரமகாலிங்கஞ் செட்டியாரவர்கள்

சீர்திருத்தம் செய்தபடி

திருச்செந்தூர், சித்தவைத்தியம்

மு. கணபதி சாமியாரவர்களால்

பார்வையிடப்பெற்று

மதுரை, புதுமண்டபம் புத்தகசாலை

இ. ராம. குருசாமிக்கோனார் சன்.

அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசிவீதி

ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரஸில்

பதிப்பிக்கப் பெற்றது.

 1941 [விலை அணா 14



உ

பரமபதி துணை.

மகா மகத்துவம் பொருந்திய

# அகத்திய மகா முனிவரருளிச் செய்த

# தத்துவம் 300.

காப்பு பாயிரம்.

பாரப்பா யெனையாண்ட சூட்சநந்தி
 பதங்காப்பு திருமூலர் பாதங் காப்பு
நேரப்பா சனகாதி யடிகள் காப்பு
 நிர்மலமாம் பதஞ்சலியின் பாதங் காப்பு
சீரப்பா புலிக்காலர் பாதங் காப்பு
 சேர்ந்தசண்டி கேசன்றன் பாதங் காப்பு
சாரப்பா குகன்தமையன் பாதங் காப்பு
 தத்துவநூ லென்னுளுந் தழைக்க வென்றே (1)

காணப்பா அளவிலகண் டார மெல்லாம்
 கரைகாண்பே னென்றவன்றன் காலைப் போலும்
ஊணப்பா யேழ்கடலை மூஞ்சூர் தானும்
 உண்பேனு னென்றுசொல்லு முறுதி போலும்
ஆணப்பா ஓர்கரையான் புவன மெல்லாம்
அடியளப்பே னென்றுசொன்ன ஆண்மை போலும்
வீணப்பா சித்தாந்த வேதாந் தத்தை
 விளம்புவேன் தத்துவத்தை விரித்துத்தானே (2)

ஞானத்தின் பெருமை.

தாமென்ற ஞானத்தின் பெருமை கேளு
 தலைகீழாய்ப் பஞ்சாக்கினி யிடையில் நின்று
கோனென்ற கோடிகற்பந் தவஞ்செய்த பலனும்
 குறியசுவ மேதயாகம் நூறு கோடி
தேனென்று செய்பலமு மூவ ருக்குச்
 செகந்தனிலே நூறுகற்பம் சித்தம் செய்தால்
கோனென்ற ஞானநிட்டை செய்ததவ பலத்துக்
 கொவ்வாது யென்றுமறை யுரைக்குங் கேளே. (3)

ஞானி மகத்துவம்.

கேளப்பா கெருடன்முன்பு சர்ப்பந் தானும்
கிட்டவுந்தா னில்லாத கெடியைப் போலும்
வாளப்பா யிருள்தானுஞ் சூரியன் முன்
வரிநிற்கா தோடிப்போம் வரிசை போலும்
கோளப்பா பஞ்சதுதான் வடவையனல் முன்பு
கூடியது நில்லாத குறியைப் போலும்
ஆளப்பா வெகுகோடி பாவஞ் செய்தோன்
அருள்ஞானி தனைக்காணில் அகன்று போமே (4)

போகாமற் படைத்தவன்றான் ஞானி பாதம்
பூசிப்பான் சிரசில்வைத்துப் புவனங் காத்தோன்
தாகமாய் ஞானியவ னினைத்த தெல்லாம்
தலையினாற் சுமந்துவந்து தருவான் பாரு
யேகமாய்ப் புவனமெல்லா மெரித்தோன் றானும்
யிவன்பின்னே திரிந்திடுவா னிவனைக் காக்கச்
சாகாத வானவர்க்கு மனிதருக்கும்
சரண்பணியக் கிடைக்குமோ சகத்திற் றானே. (5)

தானென்ற ஞானிக்கோர் பிடிதான் பிச்சை
தானளித்தோர் தங்களுக்குப் பலத்தைக் கேளு
கோனென்ற அகரமொரு நூறு கோடி
கோபுரந்தான் கோடிசெய்த பலத்துக் கொக்கும்
ஊனென்ற நால்வேதம் சாங்கமாக
ஓதியதோர் வேதியர்கள் கோடி பேர்க்கும்
தேனென்ற அன்னமிட்ட பலத்துக்கு மதிகம்
சித்தாந்தம் வேதாந்தம் செப்பும் பாரே. (6)

செப்புமப்பா ஞானியவ னிருந்தயிட மெல்லாம்
செம்பொன்மணிக் கைலாச வைகுந்த மென்பார்
ஒப்பிலவன் செய்வதெல்லாம் உலகத்து ரச்சை
ஓங்கியே யவன்பாதம் பட்டவிட மெல்லாம்
தப்பில்லா யாகாதி செய்தவிட மாகுந்
தானவனைக் கண்டாக்கால் சிவதெரி சனமாம்
அப்பாகே ளவன்வார்த்தை மந்திரமு மாகும்
அதைக்கேட்டால் வேதமென்பா ரறிவுள்ளோரே

ஞானிகள் பொய்யுரையாரேனல்.

அறுபத்து நாலுசித்துப் பெறினு மேலும்
அகிலமெல்லாந் தானாளப் பெறினும் பின்னும்
உருபுவன முழுவதுந்தான் வணங்கி யேற்றி
ஒளிர்பாதந் தலைமிசையே தாங்கிடினு மூலகில்
மருமரம்பை ஊர்வசி திலோர்த்தமை யிந்திராணி
மகளிரொடு கூடிடினும் பிறப்பிறப் பாரினும்
இருஞானி பொய்யுரையார் மெய்யே சொல்வார்
யிதுஞானிக் குண்மையென்பா ரிறைவன்றானே. 8

இறைஞானி தனைப்பூசித் தெழுந்துபணிந் தேற்றி
இவன்சரணந் தன்சிரசி லணிந்து கொண்டு
அறையவன்றன் பாதத்தை நேத்திரத்தில் வைத்து
அவன்பாத தூளியினைச் சரீரமெல்லா மணிந்து
உறைகெந்த புட்பமொடு தீப தூபம்
உபசாரஞ் செய்துமவன் சேட முண்ண
மறையிருளுங் கடுவிருளில் பருதிவரு வதுபோல்
மலநீங்கி யவனெஞ்சில் சிவனுறைய மாகும். (9)

ஆமப்பா புலிகரடி சிங்கமதம் பொங்கும்
யானையின் மேலேறி நடத்துவது வெகுவாம்
ஓமப்பா பெரியரவைப் பிடித்து வாட்டி
யோரிடத்தி லடைக்கலமா யெந்தநாளும்
சோமப்பா லுண்டிளமை யாயிருக்க லாம்பின்
சொர்ணமது செய்யலாஞ் செம்பைத் தானும்
ஆமப்பா குளிகையிட்டு அண்டமெல்லாம் பார்த்து
அறியலா மனமடங்க லறியச் சித்தே (10)

## முதலாவது வாத காண்டம்.

தத்துவநூல் தன்னையறிந் தேத்தொழிலுஞ் செய்வார்
தத்துசம யங்கள்பல வித்தையறி வாரே.

சித்திசெய்த சித்தருக்குச் சித்தரென்ற நாமம்
செப்புவதேன் சிவதீட்சை பத்தும் சித்தி
முத்திசத்தி தீட்சைபத்துஞ் சித்தி மந்திரம்
மோனசித்தி வேதாந்தஞ் சித்தாந்தஞ் சித்தி

சத்திகா யத்திரியெட் டஞ்செழுத்துஞ் சித்தி
தாரசித்தி பிரசாத்சித்தி யத்வாத சித்தி
தத்துவத்தின் சித்தியொடு தத்துவப்பிர சித்தி
சர்வதயா பாசித்தி காயசித்தி தானே. (11)

தானென்ற சொரூபசித்தி குளிகை சித்தி
தனியாத சித்தியுடன் யோக சித்தி
கோனென்ற ஞானசித்தி போத சித்தி
கொடியபிர சாதசித்தி சாரூபவத்தின் சித்தி
தேனென்ற பாப்பிரம சாத சித்தி
செப்பாதே யிருபத்தி அஞ்சு சித்தி
வானென்ற சித்தியெல்லாம் வந்த பேர்க்கு
மகத்தான சித்தரென நாம மாச்சே. (12)

ஆச்சப்பா யிருபத்தி அஞ்சு சித்தி
ஆச்சென்ற தெட்சணா மூர்த்தி தானும்
பேச்சப்பா யென்னுடனே நால்வ ருக்கும்
பேராகு மாதியிலே யுபதேசித் தார்
நீச்சப்பா நால்வருமொன் பதுபே ராச்சு
நிலையான ஒன்பதிலும் நவகோடி யாச்சு
வாச்சப்பா சித்தியெல்லா மடைந்த பேர்கள்
மனிதனல்ல தெய்வமா மக்காள் பாரே. (13)

பாரப்பா சித்தியெல்லா மிந்த நூலில்
பாடினே னிந்நூல்போல் மற்ற நூலில்
நேரப்பா சித்தரெல்லாஞ் சொல்ல வில்லை
நேர்ந்தபடி பல நூலிற் கொஞ்சஞ் சொன்னார்
சாரப்பா சுந்தரனே நூலிற் பார்த்துத்
தப்பாமல் வாதமெல்லாஞ் செய்தா னப்பா
ஆரப்பா பிள்ளையென்றூற் சுந்தரமே பிள்ளை
யவனுக்கா யின்னூலை யரைந்திட் டேனே. ( )

சுந்தரானந்தர் மறைப்பு.

அறைந்திட்ட காயசித்தி வாத சித்தி
யசையாத யோகசித்தி ஞானசித்தி கெவுனசித்தி
உரைந்திட்ட சித்தியஞ்சு மவன்சோ தித்தான்
† ஒருநூல் யிரமூலகோர்க் காகச் சொன்னேன்.

திறந்திட்டான் வழலையுப்பு சவுக்கார வைப்புச்
செயமான கடுங்காரஞ் செப்பாதே சொன்னான்
பிறந்திட்ட சுந்தரனூ † லாயிரத் திருநூறும்பார்த்துப்
பேராக யென்னூலைப் பின்பு பாரே. (15)

† சுந்தரானந்தர் காவியம் 1000 † ஷையாரால் பாடிய 1200 இவ் விரண்டு நூற்களும் அச்சாகவில்லை.

சட்டைமுனிவர் மறைப்பு.

பாரப்பா சட்டைமுனி § சவர்க்கார வைப்பில்
பாங்கான தீட்சையுப்பு யெண்ணெய்யை மறைத்
நேரப்பா கல்லுப்புக் கேழு தீட்சை (தார்
நிலையான பூனீருக் கட்ட தீட்சை
சாரப்பா செய்துகொண்டு சுண்ணத் தோடு
தனித்தமூரி தனில்கரைத்துக் காய்ச்சும் போது
சேரப்பா பொட்டிலுப்புக் கஞ்சு தீட்சை
செய்துகொண்டு அடிமுடியிற் கட்டிடாயே. (16)

§ சவர்க்கார வைப்பு சட்டைமுனி நிகண்டுச் சூத்திரம் 53 இந் நூல் ஞான சாஸ்திரத்திரட்டு 7வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

கட்டுவது ‡ கொங்கணவர் கடைக்காண்ட சூத்திரம்
கைமுறையாய்ப் பானுப்பை யெலும்பு போலக்
கட்டுப்பு ஓரைப் படியெள் ளெண்ணெய்
கலரவே கலக்கியதி லுண்டை செய்து
§ சட்டைமுனி நூல்முறையே சுண்ணஞ் செய்யத்
தப்பாது தொழிலெல்லாஞ் சித்தியாகும்
ஒட்டுவது ¶ கொங்கணவர் மறைத்த சூத்திரம்
ஓகோகோ குருவண்டோ டுப்புத் தானே. (17)

‡ கொங்கணவர் கடைக்காண்ட சூத்திரம் 60 ல் வெடியுப்பை எலும்புபோல் கட்டென்பது இந்நூல் ஞான சாஸ்திரத்திரட்டு 5வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

§ சட்டைமுனி நூலென்பது ஷை யார் வாத சூத்திரத்திரட்டு 200 இந்நூல் ஞானசாஸ்திரத்திரட்டு 7 வது பாகத்தில் சேர்ந்திருக் கிறது.

¶ கொங்கணவர் மறைத்த சூத்திர மென்பது கொங்கணவர் கடைக்காண்ட சூத்திரம் 60 இந்நூல் ஞானசாஸ்திரத் திரட்டு 5வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

கோங்கணவர் மறைப்பு.

உப்பு நின்ற கொழுஞ்சிக்காய்க் குள்ளே பார்க்க
உருவான வண்டிருக்குங் குருவண் டப்பா
செப்பாதே யான்சொன்ன தீட்சை யுப்புச்
சேர்த்தந்த வண்டோடு வீரம் பூரம்
ஒப்பான ரசஞ்சூட னாரம்வெண் ணாவி
ஒக்கநன்றாய் மத்தித்துத் துருசிற் பூசி
துப்பரவாய் ரவியிலிடச் சுண்ண மாகும்
சுண்ணத்துக் கிடைசாரஞ் சூட்ட நீரே. (18)

நீரிலே பூரத்தைப் போட்டு வைக்கில்
நிமிடத்தி லுப்பாகிக் கட்டிப் போகும்
சேருப்புக் கெட்டிலொன்று உப்புச் சுண்ணம்
சேர்த்ததிலே கடுங்கார நீர்விட் டாட்டி
பாரிலே சிறுவில்லை செய்துலர்த்தி பூதப்
பச்சைக்கற் பூரஉப்புச் சுண்ண மாகும்
வேறிதனை முன்புசெய்து § கொங்கணர் நூல்கண்டு
வித்தையெல்லாம் பின்புசெய்ய விளக்க மாமே. (19)

§ கொங்கணர் நூல் என்பது கொங்கணர் ஆதியந்த சூத்திரம் 44 இந்நூல் ஞான சாத்திரத்திரட்டு 9வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

கோங்கணவர் சிரோரத்தினம், 100ரின் பெருமை.

ஆமப்பா கொங்கணவர் நூலுக் கெல்லாம்
ஆதியாஞ் † சிரோரத்தினத் திரட்டு நூறு
ஓமப்பா அந்நூறை முன்னே பார்த்து
உரைத்தபின்பு மூன்றுகாண்ட சூத்திரமும் பாரு
காமப்பா பதினெண்பேர் நூலுக் கெல்லாம்
கருவான நூலாகுந் திரட்டு நூறு
வேமப்பா கொங்கணர்க்கு அந்நூலாலே
மேதினியிற் பிரதிட்டை யாச்சு பாரே. (20)

† கொங்கணவர் சிரோரத்தினம் 100 என்பது கொங்கணவர் சரக்குவைப்பு 100 அச்சாகவில்லை.

கருவூரார் மறைப்பு.

ஆச்சப்பா § கருவூரார் கடுங்கார நீரும்
ஆதியென்ற வழலையுப்புந் தீட்சையுப்பு மறைத்தா [ர்
பாச்சப்பா யான்சொன்ன தீட்சையுப்புச் செய்து
பாங்கான † கொங்கணர் நூற் கடுங்காரம் வைத்து

தோச்சப்பா ¶ சட்டைமுனி சொன்னபடி வழலைச்
சுண்ணத்தை மூண்புசெய்து கடுங்கார மேற்றி
நீச்சப்பா யிந்தயிடை செயசாரம் போட
நீராகும் வங்கத்தின் சுண்ணம் போடே. (21)

§ கருவூரார் கடுங்கார நீர் யென்பதை கருவூரார் முப்பு சூத்திரம் 30 ல் கூறியிருக்கிறது. இந்த சாத்திரம் ஞான சாத்திரத்திரட்டு 9 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

† கொங்கணர் நூல் என்பது கொங்கணர் ஆதியந்த சூத்திரம் 44 ஞானசாத்திரத்திரட்டு 9 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

¶ சட்டமுனி சொன்ன தென்பது சட்டமுனி வாத சூத்திரத் திரட்டு 200 ல் கூறியிருக்கிறபடி யென்க. இந்நூல் ஞானசாத்திரத் திரட்டு 7 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

போடப்பா வீரமொடு பூரம் ரெண்டும்
பொடித்ததனைப் போட்டுமே கலக்கி வைத்துத்
தோடப்பா யின்னீரில் துருசு தோய்த்தால்
சுக்கான்போற் கட்டியது வெண்மை யாகும்
காடப்பா ¶ நொண்டியிலே நாய்ப்பாகற் றயிலம்
கருவூரார் சொன்னபடி துருசில் மாட்டி
நீடப்பா யிக்குருவாற் ஜெழிலெல்லாம் பார்க்க
நிசமாங் கருவூரார் சொன்னபடி தானே (22)

¶ நொண்டியிலே என்பது கருவூரார் வாதகாவியம் நொண்டி 700 இது தனிநூல் அச்சாகியிருக்கிறது.

மச்சமுனி மறைப்பு.

சொன்னநூல் † மச்சேந்திரன் மறைத்த சூட்சம்
சொல்லாதே யாவருக்குஞ் சொல்லக் கேளு
வன்னமென்ற யெண்ணூற்றில் கருக்கிடையும் வழலை
வைப்புடனே வேணமுறை வழியாய்ச் சொன்னான்
சுண்ணமென்ற குருக்கிடையை மறைத்துப் போட்டார்
சிவசிவா எண்ணூற்றைப் போல் நூலில்லை
கண்ணமென்ற குருக்கிடைதான் தெரிந்த பேர்க்குக்
காணமல் ரசசுத்தி மறைத்தார் பாரே. (23)

† மச்சேந்திரன் சூத்திரமென்பது மச்சமுனி சரக்குவைப்பு 800 இது தனிநூல் அச்சாகியிருக்கிறது.

மறைபுகழும் ரசசுத்தி யெதென் றுக்கால்
மைந்தனே யேழுசட்டை வாங்கலாகும்
§ திறைவெண்பா நாலாயிரம் வயித்தியசிந்தா மணியில்
செபபினே னிதுவறிந்து தீர்க்கம் பாரு
அறைவெண்பா நூற்படிக்கே ஏழுசட்டை வாங்கி
யதை யெடுத்த பின்புகுருக் கிடையைக்கேழு
உரைகோச பீசமதே குருவுக்கு மாதி
ஓங்குமந்தச் சூத்திரசம் கோசமென அறியே.(24)

§ திறை வெண்பா 4000 மென்பது அகஸ்தியர் மணி வெண்பா 4000 இது அச்சாகவில்லை.

அறியப்பா ‡ மூந்நூறு பஞ்சாதி தன்னை
அருந்தமிழாய் மூன்றாகூத் திரமாய்ச் சொன்னே
செறியப்பா மூன்சூத்தி ரத்தில் தங்கம் (ன்
செம்பாகச் செயபீசம் செப்பினேனும் பார்
நெறியந்த மூன்செம்பே செயரசத்தை யடக்கும்
நிர்பீசத் ¶ திருமூலர் மந்திரத்தால் தெளிந்து
மறைமொழியின் சூத்திரத்தின் படிபீசஞ் செய்து
வைத்துருக்கி யிடைரசத்தை மாட்டிடாயே. ( )

‡ மூந்நூறு பஞ்சாதி என்பது மூன்று காண்டங்களாக கூறியுள்ள தத்துவம் முந்நூறாகிய இந்நூலென்பதே.

¶ திருமூலர் மந்திரமென்பது திருமூலர் கருக்கடை 600 இது தனிநூல் அச்சாகியிருக்கிறது.

( பீச விபரம் பின் பாடல் 76.)

மாட்டியொரு மணியாக உருக்கி வாங்கி
மைந்தனே முன்வைத்த துருசு நீற்றை
ஊட்டுமிடை வாங்கிவைத்து உமிழ்நீராலே
ஒடுங்கரைத்து மணிதனக்குப் பூசிவாட்டி
காட்டியண்டத் தூளில்வைத்து நாலு சாமம்
கடிந்தெரிக்க நிர்மலம்போல் குருவு மாகும்
மூட்டுகுரு ஒன்றுரசம் பத்துக் கூட்டி
மூகிர்ந்தரைக்க வாய்நீரா லுண்டை யாச்சே. ( )

ஆச்சப்பா யிம்மணியைப் புடஞ்செய்யக் கேளு
 ஆடாவே யெரித்திடுவாய் ‡ தோளைக்கட்டி
ஓச்சப்பா கற்போல யிருகிப் போகும்
 உத்தமனே ஊமத்தங் காயில் முப்பான்
நீச்சபபா கூவிளங்காய் தன்னில் வைக்க
 நேர்முப்பான் புடங்கோடங் கிழங்கில்வைத்து
போச்சப்பா முப்பதுதான் புடமும் போட்டுப்
 போக்கோடே வெந்தோன்றிக் கிழங்கில்வையே()

‡ தோளை—துளாந்திரம்.

மைப்பான புடமுப்பான் மாட்டிப் போடு
 மைந்தனே கெருடனுட கிழங்கில் வைத்து
மெய்ப்பான புடமுப்பான் விரைந்து போடு
 மேனூற்றி யைம்பத்தோர் புடமுந் தீர்ந்து
வாப்பான கரண்டி தனி லுருக்கி வாங்கி
 வையடா நிகழ்பந்தத்திற் முப்பான் போடு
செப்பான ரசமுருகி மணியாய் நிற்கும்
 சேர்ந்தபுடம் நாற்றெண்பத் தொன்று தானே. (28)

தானென்ற யிந்திடைக்குப் பீசஞ் சேர்த்துத்
 தட்டிமுன்போற் குருச்செய்து ரசத்திற் போட்டு
வானென்ற யிருபதுக்கொன்று பிடிக்கும் பாரு
 வாங்கிமுன்போற் புடஞ்செய்து பீசஞ் சேர்த்து
தானென்ற புடமுன்போல் போட்டுக் கட்டிக்
 கடியகுருச் செய்துரசம் நாற்பதுக்கொன் றிட்டு
மானென்று பார்க்குமுன்னே மணியாய்ப் போகும்
 வைத்திந்தப் படிக்கேற்ற மேற லாமே. (29)

யேறுமப்பா பலதுறையு மிதுமறைப்ப தாகும்
 யென்மகனே பலநாலும் யிம்முறைதான்
தேருமப்பா வலிபுடந்தான் குறைந்த சூதம்
 செயமாகா நெருப்பில்வைக்சப் பறந்து போகும்
ஆருமப்பா உலகத்தல் பலநிருட் டுண்டு
 அடங்காத கள்ளருண்டு அறியா ரப்பா
மாறுமப்பா அஞ்சாறு புடத்திற் கட்டி
 மணிசெய்தே னென்பார்கள் மாடு தானே. (30)

மாடான வாதிகட்குத் தெரிய மாட்டா
‡ மச்சமுனி யெண்ணூறு மகிழ்ந்து பார்த்து
தேடான அந்நூற்குக் குருக்கிடையுந் தேர்ந்து
திடமாக வேதையிடச் செயம்பொய் யாது
வாடாத போகர்தரு § கமலமுனி சூத்திரம்
மறைத்ததுதான் வழலைவைப்பின் மார்க்கங் கேளு
போடாத மூப்பூவால் வழலைவைப்புப்
புகலாமல் துறையெல்லாம் புகழ்ந்தார் பாரே. (31)

‡ மச்சமுனி 800 என்பது மச்சமுனி சரக்கு வைப்பு 800 இது தனிநூல் அச்சாகி யிருக்கிறது.

§ கமலமுனி சூத்திர மென்பது கமலமுனி ஞானசூத்திரம் 76 இந்நூல் ஞான சாத்திரத் திரட்டு 2 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

கமலமுனி மறைப்பு.

புகழ்ந்திட்ட வழலைவைப்பின் போக்கைக் கேளு
போற்றுவது ‡ கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம்
நிகழ்ந்திட்ட படியிணங்கன் யெண்ணெய் முன்பு
நேரான வீரம்வெள்ளை யெட்டுக் கொன்றிட்டுத்
திகழ்ந்திட்ட யிணங்கனெண்ணெய் விட்டுக் கிண்டி
செயமான உண்டையைப்போ லுருக்கி வாங்கி
நிகழ்ந்திட்ட நீறுசெய்து உப்பி லேற்ற
நிசமாக மணியாகும் வேதையாமே (32)

‡ கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 60 இந்நூல் யோக ஞான சாத்திரத்திரட்டு 5 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

வேதிக்கக் § கொங்கணவ ரேழுசபை யென்றூர்
விளங்காம லிதுரெண்டை மறைத்துப் போட்டார்
சேதிக்கச் சித்தரெல்லா மிதுரண்டை மறைத்தார்
செப்பினூர் நூல்களெல்லாந் தெரிந்து பாரு
பேதிக்க வீரம்வெள்ளை விட்டாயானல்
பேராது யெண்ணெய்சவுக் காரங் கூழாம்
ஆதிக்க வழலையது வெண்மையாகா
அடங்காத கண்டர்செய்பு மறுத்திடாதே. (33)

§ கொங்கணர் ஏழுசபை என்றது. கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 60 இந்நூல் யோக ஞான சாத்திரத் திரட்டு 5 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

அறுத்திடா தோர்சரக்குஞ் சலவை யாகா
அம்மம்மா உப்பைமுந்தி அதட்டிக் கட்டா
உறைத்திடா நவலோகக் களிம்பு மாமா
ஊடுருவி லோகத்தில் நுழைந்தி டாது
வெறுத்திடா திம்முறையை மனதிற் கொள்ளு
வேறான ¶ திருமூலர் மறைத்த சூத்திரம்
ஒருத்திடா வழலைவைப்பி லெண்ணெய் தன்னை
ஓதாமல் மறைத்துவைத்தா ரொளித்துத்தானே()

¶ திருமூலர் மறைத்த சூத்திரமென்பது. திருமூலர் குருநூல் முப்பு சூத்திரம் 200 இந்நூல் யோக ஞானசாத்திரத் திரட்டு 9வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

திருமூலர் மறைப்பு.

ஒளித்திட்ட வழலைமுறை யுரைக்கக் கேளு
உறுதியாய்க் § கொங்கணர்நூல் படிக்குச்செய்து
அறுத்திட்ட ¶ கமலமுனி சூத்திரப் படிக்கு
அடர்க்கரிய குருசெய்து உப்பிலிட்டுக் கட்டி
பளித்திட்ட கோசதங்கக் குருசவ் வாது
பாய்ச்சியே யுருக்கிடவே மணியுமாகும்
களித்திட்ட மணியெடுத்து உருக்கிப் பார்க்கக்
கரியில் நின்று கண்விட்டு ஆடுந்தானே. (35)

§ கொங்கணர் நூலென்பது கொங்கணர் கடைக்காண்ட சூத்திரம் 60 இந்நூல் யோக ஞானசாத்திரத்திரட்டு 5 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

¶ கமலமுனி சூத்திரமென்பது கமலமுனி ஞான சூத்திரம் 76 இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு 2வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

ஆடுகின்ற வச்சிரத்தின் மணிதா னென்பார்
அசையாத மணிரெத்தின முத்தேயென்பார்
கூடுகின்ற வயிரரசக் குளிகை யென்பார்
கொடுங்கமன மோடுகின்ற கமலியென்பார்
பாடுகின்ற நாதாக்கள் மயங்கிப் போவார்
பரிரசத்தார் கட்டியதோர் மணியைப்பார்த்துத்
தேடுகின்ற கோசபீசக் குருவை யப்பா
செப்பிடாதே திடமாய் உப்பைக் கட்டே (36)

திருமூலர் 500 ரின் பெருமை

கட்டுவது § மூலரை நூறு பார்த்துக்
கைவிட்ட நூல்களெல்லாங் கருதிப்பார்க்க
விட்டகுருக் கிடைகோச பீச மப்பா
விட்டவர்க்கு உப்புருக்கக் கரிக்குடிக்கும்
தொட்டாசஞ் செயமாகா தொன்றுஞ் சாரா
துப்புரவா யுருகாது உட்புகாது
திட்டமுட னிக்குருவை நூற்றுகைக ளெல்லாம்
செப்பாமற் சித்தரெல்லா மறைத்திட்டாரே. (37)

§ மூலரை நூறென்பது திருமூலர் கருக்கடை 600 இது தனி நூல் அச்சாகி இருக்கிறது.

ஆரப்பா லிங்கமுத லொன்ப துக்கும்
அங்கங்கே கட்டுகளை யறைந்தார் நூலில்
நேரப்பா ‡ கொங்கணவர் நூல்படிக்குக் கட்டி
நிசமாகக் கோசபீசக் குருவா லுருக்கச்
சேரப்பா மணியாக உருகி யாடும்
செயரசமும் பரிகூட்டி ஒன்பதுப் வெவ் வேறாய்
சாரப்பா உப்புடனே சேர வாட்டிச்
சாத்திடவே நவலோகம் வேதையாமே. (38)

‡ கொங்கணர் நூல்படிக்கு என்பது கொங்கணர் கடைக் காண்ட சூத்திரம் 60 இந்நூல் யோக ஞானசாத்திரத்திரட்டு 5 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

வேதையென்ற நூல்படிக்கு நாகம் வீரம்
விளங்கஅதைக் கட்டியபின் பீசாசக்குருவால்
ஓதுசவா திட்டுயணி யாயுருக்கி வாங்கி
யுட்பீச யொன்றுசெய ரசந்தானொன்று
தீதில்லாச் செயநாக செயவீர மொன்று
சேர்த்துருக்கக் குருவாகும் புனுகிலூட்டிச்
சோதியதை வெள்ளி செம்பிற் பத்துக் காணும்
சொல்லாதே § மூலர்நூல் தெளிந்துபாரே. (39)

§ மூலர் நூலென்பது திருமூலர் குருநூல் முப்பு சூத்திரம் 200 இந்நூல் வைத்திய வாதயோக ஞான சாத்திரத்திரட்டு 9 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

கோரக்கர் மறைப்பு.

பாரப்பா ¶ கோரக்கர் கருக்கிடையை மறைத்துப்
பாடினார் கருக்கிடைதா னேதென்றக்கால்
நேரப்பா துருசுதா நீற்றுமிட யெல்லாம்
நீறுருங் குருவிந்தா லரைத்துப்போட
சாரப்பா விந்துவே கருவென்பார்கள்
தனித்துருசு முறைக்கெல்லா மிந்நீர் விட்டால்
சேரப்பா நீறுது வெண்மை யாகா
சேர்ந்ததங்கக் குருரசத்தைச் செய்திடாயே. (40)

¶ கோரக்கர் கருக்கிடை யென்பது கோரக்கர் வகார சூத்திரம் 100 இந்நூல் வைத்திய வாதயோக ஞானசாத்திரத்திரட்டு 6வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

செய்யுமிந்நீர் மூலைப்பால் விந்தமுரியோடு
செயநாத மஞ்சுமொன்றாய்க் கூடிக்கொண்டு
பயமின்றி வீரஉறம் வழலை பூரம்
பாங்கான குருவண்டு பரியுங்கூட்டி
நயமாக அரைத்துவங்கச் சுண்ணத்தாலே
நல்லசுத்தி செய்துகண்டா மேற்றடவிப்போட
மயமாகப் பற்பமாய்ப் பொறுமி விழும்
மகத்தான ‡ சட்டைமுனி நிகண்டைப் பாரே. ()

சட்டைமுனி நிகண்டு 1200 இது தனி நூல் அச்சாகி இருக்கிறது.

சட்டைமுனி நிகண்டு 1200 ன் பெருமை.

நிகண்டிலே துருசுசுத்தி நிசமாய்ச் சொன்னார்
நிச்சயமா யின்னூலாற் குருவைச் செய்து
புகன்று நின்ற § கோரக்கர் நூற்படிக்குக் குருவை
புகழாக அங்கங்கே தெளிந்து பார்த்து
அகண்டிந்தக் குருவாலே ரசத்தைக் கட்டி
அந்திடைக்குப் பரிபீசஞ் சேர்த்துருக்கிப்
புகண்டரசம் வீரமது கூடச் சேர்த்துப்
பூசியே புடம்போடக் குருவுமாமே. (42)

§ கோரக்கர் நூல்படிக்கு யென்பது கோரக்கர் வகார சூத்திரம் 100 இந்நூல் வைத்திய வாதயோக ஞான சாத்திரத் திரட்டு 6 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

போகர் மறைப்பு.

குருவெடுத்து நவலோகத் தியந்தா யானல்
கூருதே டாத்தெட்டுக காணுமப்பா
மருவெடுத்து வீர மூத லறுபத்து நாலும்
மாட்டிமுன்னே மணியாக உருகியாடும்
திருவெடுத்த யிக்குருவே யாதி யாதி
செப்பாதே ‡ போகரிசி மறைந்த சூத்திரம்
கருவெடுத்து மூப்பூவின் யார்க்கந் தன்னைக்
காட்டாதே களவறுத்துக் காட்டுறேனே. (43)

‡ போகரிசி மறைந்த சூத்திரமென்பது போகர் மூப்பூ சூத்திர ஞானம் 51 இந்நூல் வைத்திய வாத யோக ஞான சாத்திரத் திரட்டு 1 வது பாகத்திற் சேர்ந்திருக்கிறது.

காட்டாதே பொட்டிலுப்புக் கேழுதீட்சை
கல்லுப்பு தனக்கேழு தீட்சைசெய்து
மூட்டாதே பூனீருக் கெட்டு தீட்சை
முத்துப்போற் செய்துகொண்டு மூன்றுங்கூட்டி
நாட்டாதே சுண்ண நீர் தன்னிலொரு தீட்சை
நன்றாகச் செய்ததற்குப் பத்துக்கொன்று
மூட்டாதே வீரம்வெள்ளை கூட்டியுமிழ் நீரால்
முதிரவே யரைத்துநன்றாய்ப் புடத்திற் போடே

போட்டெடுத்துக் கடுங்கார நீர்விட் டாட்டிப்
புகழாக வில்லைதட்டிப் புடத்திற்போடு
மீட்டெடுக்கச் சுண்ணமாங் கருப்பில் லாமல்
வெள்ளை நிற மாமளவும் புடத்தைப் போடு
காட்டெடுத்த சுண்ணமிது வழலை யப்பா
காட்டாதே யொருவருக்கும் போகர்மறைப்பாகும்
மூட்டுவது போகர்நூல் மறைகள் செய்ய
முறையொன்றும் பொய்யாது அருசுக்கமே (45)

§ போகர் மறைப்பாகு மென்பது போகர் மூப்பூ சூத்திர ஞானம் 51 இந்நூல் வைத்திய வாத யோகஞான சாத்திரத் திரட்டு 1 வது பாகத்திற் சேர்ந்திருக்கிறது.

ஆமப்பா யிக்குருவால் துருசு நீற்றி
ஆதியென்ற குருவாலே நாகத்தை முறித்து
ஓமப்பா யின்னீரு லஞ்சுங் கூட்டி
உத்தமனே செயதுருசுக் குருவைச் செய்து
வேமப்பா யிக்கருவும் வீரங் கூட்டி
வேதித்த நாகக்கட்டின் மேலே பூசி
தாமப்பா செம்பினிலே கொடுத்தா யானால்
தங்கமா மிந்தயிடை தங்கஞ்சேரே. (46)

பிரமேந்திரர் மறைப்பு.

சேர்த்திந்த முறைமுன்னே பார்த்துத் தேறிச்
செயமான காயசித்தி செய்துகொண்டு
கோர்த்தண்ட கடாகமெல்லாங் குளிகையாற் பார்த்(துக்
கூடினூர் சிலம்பொலியிற் போகநாதர்
ஆர்த்தயிந்தக் குருப்போக்கை மனதிற் கொள்ளு
அம்மம்மா ¶ பிரமேந்திரர் மறைத்த சூத்திரம்
வார்த்தகுருச் சரக்குகட்டு முறைக ளெல்லாம்
மறைத்திட்டார் மறைப்பெல்லா மாணுகேளே (47)

¶ பிரமேந்திரர் மறைத்த சூத்திரமென்பது இவை பிரமேந்திர ரென்பது இராமதேவர் - இராமதேவர் முப்பூசூத்திரம் 31 இந்நூல் ஞான சாத்திரத்திரட்டு 6 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

கேளப்பா ‡ போகர் சூத்திரத்திற் சொன்ன
கெடியான குருவழலே பண்ணிக்கொண்டு
ஆளப்பா செயசார மிந்திடைக்குச் சேர்த்து
ஆதியென்ற செயநீரில் வீரம்வங்க மிட்டு
நீளப்பா கலக்கியதில் துருசு தோய்த்து
நெடுரவியில் வைத்திடவே சுத்தியாச்சு
தாளப்பா திறந்துவிட்ட நாத விந்து
சாரிப்பாய் சரக்கைந்தும் துருசிற்பூசே. (48)

‡ போகர் சூத்திர மென்பது போகர் முப்பூ சூத்திரஞானம் 51 இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு 1 வது பாதத்திற் சேர்ந்திருக்கிறது.

வெண்காரக் கட்டு.

பூசியே ரவியில்வைக்கப் பொறுமி வீழும்
போக்கோடே யிந்தயிடை வீரஞ்சேர்த்து

நேசித்த வெங்காரம் பலகைக் கப்பி
நேரான ரவியிலிடக் கட்டிப்போகும்
ஆசிக்கக் காரயிடை துருசு சேர்த்து
அரைத்துவிந்தால் சாரத்தி லெப்பிப்போடு
பாசித்த யிரண்டுப்பும் படிகி மூன்றும்
பாங்கான நாதத்தா லரைத்துக் கட்டே. (49)

சாரக்கட்டு.

கட்டியே ஊசரத்தில் வைத்தெரிக்கக்
கட்டியது தந்தம்போ லிறுகி நிற்கும்
ஒட்டியது புகைந்துதென்றால் பிற்கவசங்கட்டி
ஊசரத்தில் வைத்தெரிக்க ஒடுங்கிக் கட்டும்
தொட்டயிந்தச் சாரமொன்று துருசு ஒன்று
சுகமான காரமொன்று வீரமொன்று
தட்டியிதைப் பொடிசெய்து கருவை வார்த்துச்
சாங்கமாய்க் கடுரவியிற் பட்சம் வையே. (50)

சொர்ண குரு.

வைத்தெடுக்கக் கருவாகு மிதற்கு நாமம்
மகத்தான சொர்ணகுரு வென்பார் சித்தர்
யித்திடைக்குச் செயவீரம் சேர்த்து விந்தால்
யிணங்கரைத்துச் சொர்ணகுரு பூசிக்காய்ந்து
சத்யமிது புடம்போடத் தவழ நீறுஞ்
சற்குருவிற் சரிவீரஞ் சேர்த்து ஆட்டி
சித்தாடுந் தங்கத்திற் பூசிக் காய்ந்து
செயமாகப் புடம்போடச் செயமாம் நீறே. (51)

தங்கச் சுண்ணம்.

நீறான தங்கத்தைச் சூதத்தாட்ட
நிமிடத்தில் மணியாகும் புடத்தைத் தீர்க்கக்
கூராகக் குளிகையுமாம் சாரணையுந் தீர்க்கக்
கொடியநவ லோகத்திற் கோடிக் கோடும்
ஆரான மாற்றுக்கோ ரளவில்லை யப்பா
ஆயிரமாம் வெள்ளியிலே பொன்னொன்று கூட்டிச்
சீராக உருக்கிடவே மாற்றுப் பத்து
செம்பொன்னு மிந்தமுறை தெளிந்து பாரே. (52)

தெளிந்துபார் சொர்ணகுரு சரக்கிற் பட்டால்
செணத்திலே கட்டியது செயமாந்தீயில்
ஒளிந்துபார் சொர்ணகுரு களிம்பற்ற செம்பில்
ஊட்டிப்பார் பதினாறு மாற்றுக்காணும்
களிந்துபார் சொர்ணகுரு நவலோகத்திற்
காட்டுமென்னே சரிமாற்றுக் கண்டுதீரும்
தெளிந்துவந்த பாசாண மறுபத்தி நாலிற்
றிட்டுமென்னே யுப்புவகை கட்டிப்போமே. (53)

சீனக்கட்டு.

கட்டுமப்பா செயகாரங் கண்ட ரோடு
கடிந்தரைத்துச் சீனத்தி லபபிப் போடு
வெட்டுமப்பா பட்சத்தில் கட்டிப்போகும்
மேலாக யிந்தயிடை வெள்ளை சேர்த்து
ஒட்டுமப்பா செயசூதங் கூட்டி யாட்டி
உத்தமனே வெள்ளிசெம்பில் புடத்தைப் போடத்
தட்டுமப்பா களங்காதும் செம்பி லீயச்
சரிகைவெள்ளி யீராறு மாற்று மாமே. (54)

திரிகோணச் செயநீர்.

மாத்தான சீனமுடன் கண்டர் கூட்டி
மகிழ்ந்தரைத்துப் பொட்டிலுப்புக் கப்பிகக்ப்பி
ஊத்தான ஊசரத்தில் வைத் தெரிக்க
ஒடுங்கியது யெலும்புபோ லுருவாய்க்கட்டும்
தீத்தான ரசநாகம் சரியாய் வீரம்
சேர்த்தபொடி நீருகும் யெடுத்துக் கொண்டு
பூத்தான கப்பியின்மேல் மயிரைச் சுற்றிப்
புகல்நீறில் தோய்த்தெரிய வாட்டி டாயே. (55)

வாட்டியே மயிர்சுற்றித் தோய்த்து வாட்ட
மகத்தான கம்பியுப்புச் செந்தூரம் போலாம்
மூட்டியே காரியத் தீய்ந்தா யானல்
மோசமில்லை பதினாறு மாற்றுக் காணும்
காட்டியே வெள்வங்க மிப்படியே வாட்டு
கனவேதை குடவனிலே காணுங் காணும்
மாட்டியிந்த வெண்கண்டர் செய விணங்கன்
மருவியே யரைத்துக்கல் லுப்பி லப்பே. (56)

கல்லுப்புக்கட்டு.

அப்பியே ஊசரத்தி லெரித்தா யானல்
அரகரா வயிரம்போற் கட்டிப் போகும்
ஒப்பியே தெரித்துதென்றல் வெடிப்படங்கு வரைக்கும்
மூட்டுநீ செயசீன மேலே பூசி
தப்பியே உலர்த்தியதை யெடுத்துக் கொண்டு
தங்கபற்பஞ் சவாதுடனே காரங் கூட்டி
உப்பின்மேல் பூசியே கரியில் வைத்து
ஊதிடவே கண்விட்டு ஆடுந் தானே. (57)

ஆடுகின்ற உப்புக்கு நாலி லொன்று
‡ ஆடகத்தில் சுற்றியே நாத நீரிற்
சூடனெரி தீபத்திற் தோய்த்து வாட்டு
சுருக்காகச் சிவந்துமின்னி செந்தூர மாகும்
பாடுகின்ற வெள்ளிசெம்பு யீயம் நாகம்
பதையாம விரும்பதனிற் பாய்ச்சிப் பார்க்க
ஓடுகின்ற மாத்ததுதான் பத்து பத்து
உப்புக்குப் போகாது புடசெயமு மாமே. (58)

‡ ஆடகம்—குங்குமம்.

துருசு, சூடன், பூரம், வீரம் கட்டு

செயமான உப்பதனிற் கண்டர் சேர்த்துச்
சேர்ந்தகண்டர்க் கப்பியே யெரிக்கக் கட்டும்
பயமான கண்டருட னுப்புக் கூட்டிப்
பார்க்கையிலே சூரியன்முன் சூடன் கட்டும்
மயமான செயசூடன் கண்டர் சேர்த்து
மாட்டையிலே பூரமது மகிழ்ந்து கட்டும்
யுயமான கண்டருடன் பூரஞ் சேர்த்துப்
பூட்டப்பா வீரத்திற் தீபம் வாட்டே. (59)

வாட்டயிலே கட்டியது வயிரம் போலாம்
மகத்தான கோசதங்க பற்பங் கார
மீட்டயிலே சவாதோடு மூன்றுங் கூட்டி
வீரத்துக் கப்பியே உருக்கிப் பாரு
ஊட்டயிலே வீரமெட்டு தங்க மொன்று
உருக்கியே மணியாக்கிப் பொடித்துக் கொண்டு

மூட்டுகுரு வாகுமண்டந் தன்னிலிட்டு வைக்க
முழுரவியில் மெழுகாகும் பணவிடைதா னெடுத்தே

துருசுச் செந்தூரம்.

யெடுத்தந்தக் கருவதிலே போட்டுநன்றாய் மத்தி
யிதுமெழுகாஞ் சவ்வீர மெழுகென் பார்கள்
தொடுத்தகுட வனிற்பூசி யுருக்கிப் பாரு
சொற்பசும்பொன் னீராறு மாற்றுக் காணும்
தொடுத்தபரி யொன்றுடனே ரசிதந்தா னென்று
சுத்தக்கா ரீயமொன்று செயவீர மொன்று
விடுத்துருக்கக் குருவாகு மொன்றுசெய கண்டர்
மேலப்பு நாலிடையில் வாட்டி டாயே. (61)

இடைரோமஞ் சுற்றியந்த நாத நீரில்
யிதமாக வாட்டயிலே அருணன் போலாம்
குடவன்முத லொன்பதிலும் நூற்றுக் கொன்று
கொடுத்தாக்கால் வெள்ளியிலே மாற்றுப் பத்து
வெடுத்தந்தக் குருவொன்று செயசாரம் நாலு
யென்மக்கான் வீரமொன்று நாத நீரில்
மடியரைத்துப் புடம்போடச் செந்தூர மாகும்
மாட்டையிலே நவலோகம் மாற்றுப் பத்தே. ()

பத்துமிரு கற்பூரஞ் செய்து முன்போற்
பாய்ச்சிவிடு சாரத்தைப் போற் செந்தூரம்
உத்துத்தான் நவலோக மாத்துப் பத்து
உப்புக்கு மீயத்துக்கு மோடா தப்பா
தப்பியந்த மூலருக்கும் போக ருக்கும்
சரக்காறு மாதார மண்டலந்தான் மூன்றும்
வித்தகமா மிரண்டுப்பு யிரண்டு காரம்
மேற்கண்டர் சாரம் ஆதார மாமே. (63)

ஆதார மாறுமப்பா அறிந்து கொள்ளு
அண்டவர்ண நிமிளைவீர முடன்கா ரீயமூன்று
மீதான மண்டலமாம் தங்க மொன்று
மேலான சித்தருக்கு மரீதா மப்பா

சூதான மூலருக்கு மிதுவே வித்தை
சொற்பெரிய காலாங்கிக் கிதுவே வித்தை
நாதனென்ற கொங்கணர்க்கு மிதுவே வித்தை
நாடறியப் போகர் மூலர் முறைதான் பாரே (64)

வாசமுனி மறைப்பு.

பாரப்பா பிரமேந்திர ரிந்த முறை மறைத்துப்
பாடினா ரவர் முறையிம் மறைப்ப தாகும்
நேரப்பா ‡வாசமுனி மறைத்த சூத்திரம்
நிறையான சுண்ணந்தா னேதென் றுரைக்கால்
ஓரப்பா குருவழலைச் சுண்ணஞ் சுண்ணம்
ஓங்காரா சொல்லுகிறேன் சவுக்கார மொன்று
நேரப்பா பொட்டிலொன்று கூட்டி யண்ட
நீரில்நே ராயரைத்துப் புடத்தைப் போடே. (65)

‡ வாசமுனி மறைத்த சூத்திரமென்பது தூர்வாசர் ஞான சூத்திரம் 77. இந்நூல் ஞானசாஸ்திரத்திரட்டு 4-வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

போட்டெடுக்கச் சுண்ணமதாஞ் சீனம் நீற்றில்
பூட்டியே யெரித்திடு கடுங்கார மேற்றி
தாட்டெடுத்த சவுக்காரத் திடைக்குச் சீனம்
தான்சேர்த்து நீறுசெய்து கார மேற்றி
மூட்டியெடு முன்போலே நூறு தொந்தம்
முனையான சவுக்காரங் கொடிய சுண்ணம்
ஆட்டியந்த உப்புக்குச் சாரங் கூட்டி
அசையாத புடம்போடக் கட்டிப் போமே. (66)

கட்டியதோ ருப்பெட்டுச் சவுக்கார மொன்று
கடுவீர மொன்றுஅண்ட நீரா லாட்டி
ஒட்டியதோர் வில்லைசெய்து ஊதச் சுண்ணம்
ஒருவருக்குஞ் சொல்லாதே உயர்த்தி வேதை
அட்டவுப்புச் சுண்ணமுடன் வீரஞ் சேர்த்து
அண்டநீ ராலரைத்துக் கிளிஞ்சி நீற்றில்
யிட்டபுட மெரித்தெடுக்கச் சுண்ண மாகும்
யிப்படியே நூறுதொந்த மேற்றி டாயே. (67)

யேற்றிநின்ற பூரயொன்று மால்தேவி யொன்று
பெரித்தெடுக்க அண்டநீரால் சுண்ண மாகும்
ஆற்றியிந்தப் படிதார நூறு தொந்தம்
அண்டநீ ராலரைத்து யெரிக்கச் சுண்ணம்
நூற்றுமால் தேவியொன்று வீர மொன்று
நுடங்கும் வங்கத் தப்பியொரு புடத்தைப் போட
காற்றுப்போல் நீருரும் வீரஞ் சேர்த்துக்
கலந்தப்பு நிமிளையின்மேற் காய்ச்சி டாயே.(68)

காச்சப்பா புடமொன்றில் நீறிப் போகும்
கலந்தப்பு நவச்சாரக் கட்டி மேலே
மூச்சப்பா மண்மறைவிற் புடத்தைப் போடு
மூதண்ட நவச்சாரங் கட்டிப் போகும்
வீச்சப்பா வழலையொன்று வீர மொன்று
மேலான பூரமொன்று சாரம் பத்து
கூச்சப்பா அரைத்தூதச் சுண்ணமாகும்
கொடுநிமிளை வங்கத்தை யிப்படித்தா னீற்றே.

நீற்றிநின்ற சாரத்தில் வீரஞ் சேர்த்து
நேராக அரை துருசிற் கட்டிப் போட
கூற்றுகின்ற சுக்கானல் நேர்பா யூது
கொடியரவி மூன்றுநா ளுணர்ந்த பின்பு
நீட்டிநின்ற துருசொன்று வீர மொன்று
நிலையான ரசமொன்று தங்க மொன்று
மாட்டுகின்ற நாலினையு மண்ட நீரால்
மாட்டியரைத் தெரியண்ட நீரிற் றுனே. (70)

தானான குருவாகு மிந்திடைக்கு வீரம்
சாற்றியரைத் தெரித்திடவே நூறு தொந்தம்
கோனான வீரமது குருவே யாகும்
குருவிடைக்கு யேழுசட்டை கழன்ற சூதம்
தேனேகேள் சேர்த்தரைத்து யெரிமுச் சாமம்
சேர்ந்தரசம் மல்லிகைப்பூப் போலே நிற்கும்
மானேயிப் படிச்சூதம் நூறு தொந்தம்
மாழுமடா அண்டவிந்து நீரிற் றுனே. (71)

நீர்விந்தால் ரசம்நீறும் வீரம் நீறும்
நேர்ந்தரைத்து பரித்தகட்டிற் பூசிக் காய்ச்சு
பாரண்டத் தூளில்வைத்து யெரிநேர் பாகப்
பற்பமது மல்லிகைப்பூப் போலே யாகும்
சாரநீ ரசத்திலிட வெண்ணெய் யாகும்
தப்பாத புடந்தீர்ந்து நாகரசஞ் சேர்த்துக்
காரசெம்பிற் கொடுத்திடவே களிம்பு நீங்கிக்
கனகமது தசைமாத்துக் காணுங் காணே. (72)

இடைக்காட்டர் மறைப்பு.

காணப்பா யிச்சுண்ணந் தொந்தங் கோடி
கவர்கோடி துறைகோடி கணக்கோ யில்லை
பூணப்பா ‡வாசமுனி நூல்முறையே பார்க்கப்
பொய்யாது யிம்முறைகள் நூலுக் காதி
தோணப்பா §யிடைக்காட்டார் மறைத்த சூத்திரம்
சொல்லாது சொல்லுகிறேன் குருக்கிடையின் மறைப்பு
வீணைப்பா செயரசத்திற் தங்கந் தன்னை
மேற்பீசஞ் செய்யாமல் விளம்பி னாரே. (73)

‡ வாசமுனி நூலென்பது தூர்வாசர் ஞான சூத்திரம் 77 இந்நூல் ஞான சாஸ்திரத்திரட்டு 4 வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது

§ இடைக்காடர் மறைத்த சூத்திரமென்பது இடைக்காட்டுச் சித்தர் ஞான சூத்திரம் 70. இந்நூல் ஞானசாஸ்திரத்திரட்டு 2-வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

விளம்பாத பீசம்விட்டால் ரசமா ழாது
மேலான குருவாகா வயங் கூடாது
தளம்பாத வீரலிங்க முள்வாங் காது
தணிநிமிளை சேர்ந்துருகி மணியா காது
களிம்பான செம்பீய முரு வடங்கிக்
கட்டாது கல்லுப்பு யிணங்கன் கண்டர்
உளம்பான தகடுதட்டி வாட்டும் போது
உட்புகுந்து சிவக்காது உண்மை கேளே. (74)

கேளப்பா சுத்த ஆடகத்தைப் போடக்
கெட்டுப்போந் துறைக்கெல்லாம் சகல நூலும்
பாளப்பா சொல்லவில்லை பீச மிட்டுப்
பார்க்கவந்த முறைகளது பலிக்கும் பாரு

கோளப்பா யான்சொன்ன சாத்திரமின் னூலில்
கொட்டினேன் பீசத்தின் குருவைக் கேளு
நீளப்பா தங்கயிடை ரவியிற் சேர்த்து
நிலைத்தகெந்தி ரசலிங்கஞ் சிலையுங் கூட்டே.()

பீச விபரம். (முன்பாடல் 29)

கூட்டியே பொடித்துப்பின் வாட்டிக் காரங்
கொடியதங்க மேல்வைத்துப் பொடியைப் போட்டு
நாட்டியே அளிஞ்சிவிரைத் தயிலங் குத்து
நலமான செம்பற்றுப் பரிதா னிற்கும்
மாட்டுபத்துத் தாஞ்செய்புப் பொடியும் போட்டு
மகத்தான அளிஞ்சிநெய்யைப் பத்துவிசை குத்த
நீட்டியந்தத் தங்கமது வருணன் போல்
நிர்மலம்போல் பீசமுமாம் எடுத்துக் கொள்ளே.

கொள்ளப்பா பதினெண்பேர் நூல் முறைக்கும்
கூட்டப்பா யிப்பீசம் துறைகட் கெல்லாம்
விள்ளப்பா பீசம்விட்டால் வேதை யில்லை
மேலான குருக்கிடையை விள்ளக் கேளு
தள்ளப்பா யேழுசட்டை கழன்ற சூதம்
தனித்துருகு நீற்றுமேல மணியாய்ச் செய்து
யெள்ளப்பா யிந்தயிடை பீசஞ் சேர்த்து
யெளில்வீரம் வெண்கண்டர் சேர்த்து அப்பே.

அப்பியே அண்ட நீர் தன்னில் வைத்து
அசையாம லெரித்தெடுக்கக் குருவு மாகும்
ஒப்பியிந்தக் குருவல்லோ உப்புமுதற் சரக்கு
ஓடாமற்கட்டி மணியா யிருக்கச் செய்யும்
செப்பாதே வெண்கண்டர் செயசார காரம்
சேர்த்துருக்க நாகத்தா விரும்பைத் தானும்
இப்பான செம்பாகுஞ் செப்பி ரண்டு
எழில்தங்க பீசமொன்று உருக்கி டாயே. (78)

உருக்கியே வீரம்லிங்கம் சிலைகாரம் நிமிளை
உத்தரைத்துப் புடம்போ[illegible] [illegible]ழுங்கிப் போகும்

நருக்கியே வெள்ளிதனிற் கொடுத்திடாய் நீ
நல்மாத்து ஒன்பதரை நாடிப் பாரு
சுருக்கமிந்தத் தொழில்தானு முன்னே பார்த்துச்
சோதித்து யிடைக்காட்டார் சொன்ன நூல்கள்
தருக்கமில்லை பீசரசங் குருவாய்ச் செய்து
தாக்கிடவே துறைகளெல்லாந் தவறிடாதே.(79)

நந்தீசர் மறைப்பு.

தவறிடா ‡நந்தீசர் சொன்ன சூத்திரம்
தன்மறைப்பு சாரங்கட் டாமற் சொன்னார்
தவறியந்தத் துறைதோறும் பச்சைச் சாரம்
சுண்ணத்திற் கூட்டிடவே புகை நீருகும்
கவருது ஓர்சரக்கும் கட்டி டாது
கடியமூ வங்கத்தை யறுத்துப் போடும்
சிவனன்று கட்டியதோர் சாரந் தன்னைச்
சேர்த்துவந்த செயநீரில் சரக்குச் சாமே. (80)

‡ நந்தீசர் சொன்ன சூத்திரமென்பது நந்தீசர் நிகண்டு சூத்திரம் 30. இந்நூல் நந்தி நிகண்டு 300-ல் சேர்ந்திருக்கிறது.

சாமப்பா அண்டம்போல் சாரஞ் சீவி
தனித்துருசு நேரிணங்கன் கல்லுப் போடு
வேமப்பா வரைத்தப்பி ஊசரத்தி லெரிக்க
விள்ளாதே நவச்சார மடங்கமட்டு மெரித்து
போமப்பா ரசந்துத்தம் வீரம் கண்டர்
போக்கான சவுக்கார மஞ்சுங் கூட்டி
ஆமப்பா யெருக்கலம்பால் விட்டரைத்து
அப்பியண்டங் கிளிஞ்சியிலு லரைத் துலர்த்தே.()

உலர்த்தியே புடம்போடச் சுண்ணமாகும்
உற்றபச்சைச் சாரமிட நீற தாகும்
பிலத்தநவச் சாரத்தைக் கிளிஞ்சியண்ட நீரால்
பேசாமற் சேர்த்தரைக்க மெழுகு மாகும்
செலத்தில்பச்சைச் சாரமிட மெழுகாகா தொன்றும்
செப்பியநூ லெல்லாம்பொய் யென்றெண்ணாதே
உலத்தியது புடம்போட நீறிப் போகும்
உயரமுரி துளிசேர்த்துப் பனியில் வையே. (82)

பனியில்வரும் நீர்தனிலே நாகஞ் சாய்க்கப்
பளிச்சென்று யெழுசட்டை கழன்று போகும்
யினியதக டடித்ததனுக் கெட்டுக் கொன்று
யேற்றமாங் கோசபீ சந்தான் சேர்த்துத்
தனியாக வெண்கண்டர் வீரத் தோடு
தாக்கியொரு புடம்போடக் குருவாய் நிற்கும்
புனிதகுரு தங்கத்திற் பூசிப் போடப்
பொற்குருவாம் முதற்குருவா மெட்டுக் கொன்றே.

ஒன்றாகச் சேர்த்துநவ லோகத் தூட்ட
ஒளிதங்க மீரெட்டு மாத்துக் காணும்
பொன்றாத சாரத்தின் செயநீ ரெல்லாம்
போக்கான புட்கரணி நீர்க்கொப் பாகும்
நன்றான சீடனுக்கு யிம்முறையைக் காட்டி
நாதனென ¶நந்தீசர் நூலு மீய்ந்து
துன்றான துறைகளெல்லாம் பார்க்கச் சொல்லு
சொன்னதொன்றும் பொய்யாது வேறு கேளே.

¶ நந்தீசர் சொன்ன நூலென்பது நந்திகருக்கடை 300 இது தனி நூல் அச்சாகியிருக்கிறது.

உரோமரிசி மறைப்பு.

கேளப்பா ‡உரோமரிசி மறைத்த சூத்திரம்
கெடியான வீரவைப்பை மறைத்துச் சொன்னார்
வாளப்பா வீரவைப்பு வகையைக் கேளு
வளர்சீன மூவைந்து வெடிமூன் றொன்கு
கோளப்பா கண்டர்ரெண்டு காரம் ரெண்டு
கொடுஞ்சார மரைகூட்டித் தீனீர் வாங்கி
மீளப்பா லிங்கத்தில் ரசத்தை வாங்கி
விட்டெரிக்கில் தவளம்போல் விரியும் பாரே (85)

‡உரோமரிசி மறைத்த சூத்திரமென்பது உரோமரிசி குருநூல்50. இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு 8-வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

விரிந்தரசம் பலமெட்டு கல்லுப்பு கண்டர்
மேல்வருத்து முக்காற்சேர் பேதிவெடி சீனம்
பரிந்தரைச்சேர் பூனீரு வெள்ளையுமோ அரைக்கால்
பாங்கான நவச்சாரஞ் சேர்மா காணி

சொரிந்தெட்டுங் குப்பிக்குப் பாதி யிட்டுச்
சோராம லெரித்திடவே மூன்று ளுட்தான்
பரிந்தெடுக்க வீரமது மேலே யேறிப்
பலகைபோ லிருக்குமதை யெடுத்துக் கொள்ளே.()

கோச்சி வீரம்

யெடுத்திந்த வீரத்தை முன்போற் சேர்த்து
யெரித்திடவே கொச்சியதாம் யிப்படி யீராறு
விடுத்ததொந்த மேற்றிடவே கோடா சூரி
வீரமென்பா ரிவ்வீரம் விருப்பிச் செய்து
தொடுத்தசலம் விட்டவுடன் உருகிப் போகும்
துறைதோரு மிவ்வீரங் கூட்டு கூட்டு
அடுத்திந்த வீரம்விட்டால் விழலாய்ப் போகும்
அம்பரமாம் வீரம்விட்டால் நூல்பொய் யாமே.()

நூலான வீரத்திற் பூரங் கண்டர்
நுட்பமாய்க் கூட்டியதை யரைத்துக் கட்டி
பாலான சூடனுட தீயில் வாட்டிப்
படர்கோச பீசபற்பம் பரிந்து பூசி
மாலாக உருக்கிடவே மணியாய் நிற்கும்
மணிநாலு பரிரேக்கு ஒன்று சுத்தி
கோலாக உருக்கிலங்கே குருவாய்ப் போகும்
குருவெட்டுக் கொன்றுகுரு வண்டு கூட்டே.(88)

கூட்டுஉரம் பூரமுடன் பொடித்தூவி தன்னில்
கொட்டிடவே செயகுருவாம் பணவிடையண் டத்தில்
நீட்டுமுன்னே தயிலமுமாம் பலந்தா னென்று
நீரான குருவொன்று ரசத்திற் கூட்டி
ஆட்டுமுன்னே மணியாகும் தயிலத் தாலே
அம்மம்மா நெகிழத்தில் உருகிப் போகும்
மாட்டுமுன்னே செம்பினிலே மாற்றுப் பத்து
மகத்தான ஒன்பதுக்குங் குருத்தயிலம் பூசே.(89)

பூசியே உருக்கவது நாக மாகும்
போக்கோடே நவலோகம் வேதை யாகும்
காசியே போய்த்திரிந்தால் வருமோ மக்காள்
கனமான வீரத்தை முன்னே பண்ணு

நேசமாய்ப் பலநூலும் பார்த்து ‡உரோம
 ரிசிநூலும் பார்க்கஅங்கே முறைபொய் யாது
ஆசையாய் வீரமுன்னே வைத்தோன் முத்தன்
 அரியாதான் சுட்டலைந்து பேயா வானே. (90)

‡ உரோமரிசி நூலென்பது உரோமரிசி வயித்தியம் 500. இது தனி நூல். அச்சாகியிருக்கிறது.

பிரமமுனி மறைப்பு.

பேய்மக்கள் §பிரமமுனி மறைத்த சூத்திரம்
 பிசகாமற் செம்புசுத்தி மறைத்துப் போட்டார்
தாயான துருசுனுட செம்ப தொன்று
 தனித்தரவி யொன்றிரண்டின் சுத்தி போனல்
மாயாது களிம்பொன்று பாசாண மெல்லாம்
 மடித்தாலும் லோகத்திற் கொடுக் துருக்கில்
வாயாது உரைசிவந்து கருத்து மின்னும்
 வாதிகளே யிதையறியார் மாடு தானே. (91)

§பிரமமுனி மறைத்த சூத்திரமென்பது பிரமமுனி முப்பூ தீட்சை 45. இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு 6-வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

தானென்ற சாரநீர் தன்னை வாங்கித்
 தனித்தபடி யொன்றளந்து வைத்துக் கொண்டு
கோனென்ற வங்கபற்பம் வீரம் பூரம்
 கொடியபலங் காலரைத்துச் செம்புருக்கி வார்க்க
மானேகே ளெழுதரத்தில் ஊறல் போகும்
 வங்கமுடன் வீரமப்பி வழலை பூசித்
தேனென்ற சீலைசுற்றி வங்கந்நன்னிற் றோய்க்கச்
 செயசுத்தி யாகும்நல்ல துருசு தானே. (92)

துருசு செம்பு சுத்தி.

துருசினுள்ளே நின்றசெம்பு சுத்தியாகச்
 சொல்லாதே வழலைவங்க மாதி யாதி
வரிசையஞ்சு மித்திரத்தின் பூத மஞ்சு
 மரைத்துருட்டி ரவியில்வைக்க மகத்தாஞ் சுண்ணம்
தெரிசிக்க நிமிளைவங்க நாகஞ் சூதம்
 செயமாகும் செம்பிலிட வேதை யாகும்

பரிசிக்கச் சுத்தித்த செம் புருக்கிப்
பாச்சப்பா நாகமுடன் வீரந் தானே. (93)

அழுகண்ணி சித்தர் மறைப்பு.

வீரமுடன் மாத்தெட்டு விரைந்து காணும்
மேலான நூல்முறைக்கு யிதுவே யாதி
சீரான ¶பிரமமுனி நூலுக் குள்ளே
செப்பாத கருவிதுதான் தெளிந்து பார்த்து
வாரமுடன் செய்யநன்றாய்ப் பலிக்கும் பாரு
வருந்திப்பார் மறைப்பில்லை ‡கண்ணிச் சித்தர்
சாரமுடன் பூவழலை மறைத்துச் சொன்னார்
சாற்றுகிறே னிக்குருவைத் தனித்துச் செய்யே ()

¶பிரமமுனி நாலுக்குள்ளே என்பது பிரமமுனி கருக்கடை 380. இது தனி நூல். அச்சாகியிருக்கிறது.

‡கண்ணிச் சித்தரென்பது அழுகண்ணிச் சித்தர் பாடல் 200 இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு 8-வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

தனியஉவர்ப் பூவைந்து தூரஞ்சுத்தி செய்து
சாங்கமாய்க் கல்லுப்பை யேழுதரங் காய்ச்சி
யினியவெடி யுப்பஞ்சு தரமுங் காய்ச்சி
யேகமாய்ப் படியமுரி யீரெட் டாகும்
பினியசுண்ண மிரண்டுபடி தான் கரைத்துப்
பின்னிருத்துக் கல்லுப்புப் படியொன் றில் சாரம்
கனியெட்டுப் படிகரைத்துக் கயிறி னாலே
கடைந்திடவே நுரைவரும்போ தெடுத்துக் கொண்டே

கொண்ட நுரை கடிகையொன் றிற் சலமூ மாகும்
கூறுதே படிரெண்டு அளந்து விட்டுக்
கண்டாிரு காரியுப்பு ரெண்டு பண்ணை
கடுவீரம் யேழுவகைக் கரைப்பலந்தான் போட்டு
கிண்டியந்த நுரை நீரைக் காய்ச்ச உப்பாம்
கெடியான கடுங்காரம் பூவழலை யாகும்
விண்டபுளி யெட்டுவெடி யுப்புப் பத்து
மேலான கல்லுப்புக் கண்ட ரோடே. (96)

ஓடாச்சா ரம்மிணங்கள் பண்ணே யஞ்சு
ஒவ்வொன்று பலமறைதான் புளியுப்புக் கூட்டி
தேடாதே யேழுநா ளிடித்து வாங்கிச்
செயமாகக் கட்டிப்போம் வில்லை செய்து
சாடாதே ஓட்டிலிட்டு உலையி லூதத்
தவளம்போல் நீருரும் பனியில் வைக்கக்
காடாத செயநீராம் சீனத் தூட்டக்
கடியசுண்ண மாருமிது யிட்டி டாயே. (97)

இட்டஉப்பு நீர்தனிலே பூவழலை யரைத்து
யிதமாகப் புடம்போட நீறும் பாரு
தொட்டஅண்ட நீரதனில் தோய்த்தரைத்துப் பூசச்
சுருக்கான சுண்ணமதா மூப்பைக் கட்டும்
முட்டஅந்தச் சீனத்தில் சுண்ணங் கூட்டி
மூசியாம லெரித்திடுவாய் துறைகள் தோறும்
பட்டயிந்தக் குருவாலே சரக்கைக் கட்டிப்
பாய்ச்சிடவே நிசவேதை பலிக்கும் பாரே.(98)

புண்ணாக்கீசர் மறைப்பு.

பலித்திடவே யிக்குருவைக் கன்னிச் சித்தர்
பாடாமல் மறைத்துவைத்தார் பார்த்துச் செய்ய
ஒலித்திடவே யிக்குருவைச் செய்து கொண்டு
ஊட்டப்பா அவருரைத்த முறைபொய் யாது
கெலித்திடவே §புண்ணாக்கர் மறைத்த சூத்திரம்
கெடியான குருவீரப் போக்கு மைந்தா
நலித்திடவே குருவீரஞ் சொல்லக் கேளு
நாதாந்தப் பூவழலை நீறு நாலே.

§புண்ணாக்கர் மறைத்த சூத்திரமென்பது புச்
செயநீர் 45. இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு
சேர்ந்திருக்கிறது.

கடுங்காரச் செயநீர்.

நாலாகுஞ் செயசாரங் கூட்டி யாட்ட
நல்லநீ ராகுமது பனியில் வைப்பாய்
காலான நீர்பூரப் பலகை தோய்த்துக்
கடுரவியில் போடுபட்சங் கட்டிப் போகும்

கோலான கடுங்காரச் செயநீர் கேளு
கூராதே யண்டமது ஐம்பத் தொன்று
மேலான வெண்கருவைப் பீங்கானி லிட்டு
வெடியோடு சுண்ணமிரு பலந்தான் தூக்கே. (100)

தூக்கியே சுண்ண நீர் தனிற் கரைத்துச்
சுத்தநீர் சிரங்கையெருக் கலம்பா லிருசிரங்கை
தாக்குபொடி நீர்சிரங்கை கருவில்விட்டுக் கலக்கித்
தனிப்புனுகு உரம்பூரஞ் சூட னவி
தேக்குரசங் குருவண்டு சீனங் காரம்
செய்வழலை லிங்கம்வெள்ளை சிலைகோழிக் காரம்
நீக்கரிய வீரமன்ன பேதியீ ரெட்டும்
நிறைவகைக்குக் காசிடைதான் பொடித்துப் போடே. ()

போடப்பா கயிறுலே கடைய வெண்ணெய்
பொங்குமப்பா பீங்கானில் வேறே வாங்கி
தேடப்பா மூன்றுநாள் தெளிய வைக்கத்
தென்னீராஞ் சகலகுருச் செயநீ ராகும்
ஆடப்பா யின்னீரால் செயபூ ரத்தை
அரைத்தப்பி வாட்டையிலே வீரங் கட்டும்
தேடப்பா யிவ்வீரந் துறைகட் கெல்லாம்
சேர்க்கமுறை பொய்யாது சித்தி யாமே. (102)

சித்திசெய்யு முறைக்கெல்லாம் வீரஞ் சேர்க்கச்
செப்புகின்ற துறைக்கெல்லாம் வீரங் கட்டும்
பத்தியின்றிக் கட்டாத வீரம் போட்டால்
பலியாது ஒருதுறையும் புகைந்து போகும்
சத்தியமாய் நூலெல்லாம் பொய்யென் றெண்ணுஞ்
சண்டாள வாதிகளே யிதுவே மூலம்
கத்துகின்ற பேய்களுமே செயவீர மறியார்
காணுமற் சுட்டலைந்து கதறு வாரே. (103)

கதறுமற் புண்ணுக்குச் சித்தர் சொன்ன
கைகண்ட நூல்முறையின் குருவே வீரம்
பதறுதே மூடருக்கு முறைசொல் லாதே
பதினெட்டுச் சித்தர்சொன்ன நூலும் பாரு

உதருமற் பலநூலுங் கலந்து பார்த்து
உரைத்தபின்பு யின்னூலே யுற்றுப் பாரு
சிதருதே ‡யான்மறைத்த குருவின் மார்க்கம்
செப்புகிறேன் வழலைவைப்பு நீறு தானே.(104)

¶ புண்ணுக்குச் சித்தர் சொன்னதென்பது புண்ணுக்கீசர் முப்பூச் சுண்ணச் செயநீர் 45. இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு 2-வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

‡ யான் மறைத்த குருவின் மார்க்கமென்பது அகத்தியர் குருநூல் 50. இந்நூல் ஞானசாத்திரத்திரட்டு 10-வது பாகத்தில் சேர்ந்திருக்கிறது.

குருமுனி மறைப்பு.

நீருன கற்சுண்ணம் படிதான் ரெண்டு
நிலையமுரி யீரெட்டுப் படியிற் ருக்கு
கூருகக் கலக்கியே யிருத்துக் கொண்டு
கொட்டப்பா தீட்சைசெய்த பூனீ ரெட்டு
வேருகக் கலக்கியே யிருத்துக் கொண்டு
மேலான தீட்சையுப்புப் படிதா னென்று
ஆருகக் கலக்கியே வைத்துக் கொண்டு
அடியில் நடு வெடியுப்பு முடிமேல் வையே.(105)

வேகா வழலை.

முடியதுவும் பலமஞ்சு அடிபலந்தா னெட்டு
முனையான நடுவிணங்கன் பலந்தா னென்று
திடமான கலையத்தி லிட்டு மூடிச்
சீலைசெய்து நூறெருவிற் புடமுந் தீர்த்து
வடிவுடைய அண்டநீர் விட்டு ஆட்டி
மகத்தான வில்லைசெய்து புடத்தைப் போட்டு
கடிதான மூத்திரத்திற் கரைத் திருத்துக்
காய்ச்சிடவே கம்பியதாய்க் கட்டிப் போமே.(106)

சவுக்கார வைப்பு.

போகாத உப்புஅரைப் படிதான் தூக்கிப்
பொடித்துயெள் ளெண்ணெய்யரைப் படியிற் கலக்கி

வேகாத மூன்வழலை நீரைக் காய்ச்சி
விட்டிடுவா யெண்ணெயுப்பு விளங்கக் காய்ச்சி
வாகான அண்டம்போ லுண்டை செய்து
வழலையைத்தான் கடுரவியில் வைத் துலர்த்தி
சாகாத பாண்டத்திற் சுண்ண மிட்டுத்
தனிமேலு முண்டைவைத்து மேற்சுண்ணம் போடே.

சுண்ணத்திற் சலம்விட்டு நீற்றி வாங்கித்
தூக்கியே கிளிகட்டி வைத்துக் கொண்டு
பின்னுமந்தச் சுண்ணத்திற் நீர் திருப்பப்
பிசகாமல் நூறுதரம் நீற்ற நீற்ற
வண்ணமென்ற சவுக்கார மெலுப்பு போலாம்
மைந்தனே கடுங்கார நீரிற் தோய்த்து
கண்ணமென்ற ரவியில்வைத்துப் பட்சந் தானும்
கடுவழலை அஞ்சுசுண்ணக் குகையில் வையே.()

வைத்தெரிக்கச் சாமமொன்று மல்லிகைப்பூப் போலாம்
மைந்தனே சவுக்காரஞ் சுண்ணம் சுண்ணம்
யித்தையல்லோ நூல்களிலே மறைத்துச் சித்தர்
யான்மறைத்தே னென்றார்கள் நூல்கள் தோறும்
சத்தியமாய் மெய்யாகப் பதினெண் பேரும்
தான்மறைத்த கருவையெல்லாம் தத்து வத்திற்
வித்தையெந்தன் மறைப்புடனே சொல்லிப் போட்டேன்
விரும்பியிந்த நூலைவிட்டால் வாதம் போச்சே.()

இந்நூல் பெருமை

போச்சப்பா பதினெண்பேர் நூல்க ளெல்லாம்
பொய்யாகப் போகாமற் தத்துவத்திற் சென்னேன்
நீச்சப்பா தத்துவநூ லுலகிற் கிட்டில்
நிச்சயமாய் சிவயோகச் சித்த ராவார்
ஆச்சப்பா தத்துவத்தை யுணர்ந்தோர் சித்தர்
அரியாதான் சுட்டலைந்து அலைவான் பாரு
நீச்சப்பா தத்துவத்தின் நிலைக ளெல்லாம்
நிறைநிறையாய்ச் சொல்லுகிறேன் வாத முற்றே.(110)

வாத காண்டம் முற்றிற்று.

# இரண்டாவது தத்துவகாண்டம்.

அத்துவித ஞானமெனுந் தத்துவஞா னத்தை
சித்திபெரு வாரறிவார் பித்தரறி யாரே.

சமையம் 12

முத்தான ஆகமத்தி னெறியில் நிற்கும்
முறைசைவம் பாசுபதம் மகாவிரதத் தோடு
சித்திசேர் காளாமுகம் வாமம் வைரவமும்
சித்தாந்தத் துடன்சமைய மீதாறு பேர்க்கும்
தத்துவந்தான் முப்பத்தி ஆறதாகும்
தனித்தபடறை நெறிநிற்கும் நியாயவை சேடிகமும்
சத்தான பாட்டமுடன் வைணவமீ மாங்சம்
சாங்கியம்பிர பாகரமும் புறச்சமைய மாறே.(111)

ஆருன சமையங்கள் வைதீக மாகும்
ஆங்கவர்க்குத் தத்துவந்தான் மூவெட் டென்பார்
கூருன சமண்மாயா வாதி புத்தன்
கூடுமட்ட வாதிகட்குத் தத்துவமூ வைந்தாம்
வேருன வேதாந்தி தனக்குஉப நிடதம்
விளங்கியதோர் தத்துவந்தா னிருபத்தெட் டென்பார்
மாருத தத்துவந்தான் தொண்ணூற் ருறும்
மக்களே யெல்லோர்க்கும் பொதுவாங் காணே.()

சித்தர் தத்துவம்.

காணப்பா சித்தருக்குத் தத்துவந்தான் கேளு
கைகண்ட வேதாந்தஞ் சித்தாந்த மாகும்
தோணப்பா சமரசத்தின் தத்து வந்தான்
சொல்லக்கேள் பூதமைந்து வசனுதி யைந்து
வீணப்பா தோத்ராதி யஞ்சே யாகும்
வேருன சத்தாதி யஞ்ச தாகும்
ஊணப்பா காரணமது நான்குங் கூடி
உத்தமனே சிவதத்துவ மூவெட் டாமே.(112)

ஆமப்பா காரியதத் துவமிருப தாகும்
அடர்காலங் கலைநியதி யிராகம்வித்தை மாயை
ஓமப்பா புருடனுடன் தத்துவமே யேழு
ஒடுங்காத வித்தியா தத்துவமு மாகும்

கா்மப்பா காரணகா ரியமீ தாகும்
கிட்டந்தச் சுத்தவித்தை யீசுரஞ் சதாக்கியம்
தாமப்பா சத்திசிவ தத்துவ மஞ்சும்
சாங்கமாய்க் காரணதத் துவமென் றூரே. (114)

என்றதொரு ஆத்துமதத்துவ மிருபத்தி னாலும்
என்மக்காள் தூலதத்துவ மென்பார் சித்தர்
பொன்றாத வித்தியா தத்துவங்க ளேழும்
போகாத சூச்சும தேகந்தா னென்பார்
நன்றான சுத்தத்துவ மஞ்சு தன்னை
நல்மான காரணதே கந்தா னென்பார்
குன்றாத தத்துவந்தான் முப்பத் தாறும்
கூறிய உட்கருவி யென்பார் தானே. (115)

தானென்ற கோசமைந்து வாயு பத்துத்
தனித்துநின்ற அவத்தையஞ்சு குணந்தான் மூன்
கோனென்ற ராகமெட்டுத் தாது யேழு (று
குறித்தநோய் மூன்றுஆ தார மாறு
தேனென்ற நாடிபத்து மண்டலந்தான் மூன்று
சிறப்பான அறுபதுந்தான் புரக்கருவி யென்றும்
வானென்ற சித்தருக்குத் தொண்ணூற் றாறு
வகையாகு மூலகநூல் வழிவே றாமே. (116)

வேறான உலகத்தோர் பலநூல் பார்த்து
வெவ்வேறாய்த் தத்துவத்தை விளைதஞ் சொல்வார்
கூறாதே யவர்களிடங் கூடி டாதே
குறியான பூதத்தின் குறிப்பைக் கேளு
வாறான பிரிதிவியு மப்பு தேய்வு
அடர்வாய்வு ஆகாசம் பூத மஞ்சில்
சேறாதே சித்தர்நூல் வேத நூலும்
சேர்ந்துபல விதஞ்சொல்லும் தெளிவாய்த் தானே

தத்துவ விபரம். (ஆத்ம தத்துவம் 24)

தானென்ற பிரிதிவியு மப்பு தேய்வு
தனிவாயு வாகாசம் பூத மஞ்சாம்

வானென்ற பொறிதோத்திரம் தொக்கு சட்சு
வளர்ந்திகளும் சிங்குவையாக் கிராண மைந்தாம்
கோனென்ற சத்தமுடன் பரிசம் ரூபம்
குளிர்ந்தரச கெந்தமுடன் புலனைந் தாகும்
ஊனென்ற வாக்குபாதம் பாணிபா யுருவோடு
உபஸ்தமுடன் கர்மேந்திரிய மைந்து சேர்ந்தே.

சேர்ந்தமனம் புத்தியுட னுங்காரஞ் சித்தம்
சேர்நாலு மாமந்தக் கரண மென்பார்
ஓர்காலங் கலைநியதி வித்தை ராக
மூடன்புருடன் மாயையோ ரேழும் பின்பு
சார்ந்தசுத்த வித்தையொடு யீசுர சதாக்கியம்
சத்திசிவ மைந்தாந் தத்துவமூ வகையில்
ஏர்ந்தபிரு திவிமுதலாய்ச் சித்த முடிவாக
வெண்மூன்று மாத்துமதத் துவமென்பார் தானே

தானென்ற காலமுதல் மாயைமுடி வாகத்
தனிவித்தியா தத்துவ மேழென் பார்கள்
கோனென்ற சுத்தவித்தை முதற்சிவமீ றாகக்
கொள்கிநின்ற சிவதத்துவ மைந்து தானும்
வானென்ற ஆத்மதத்துவஞ் சுத்த மாகும்
வளர்வித்தி யாதத்துவஞ் சுத்தா சுத்தம்
கானென்ற சிவதத்துவ மைந்து தானுங்
கண்டகண்ட சுத்தமென்பார் கலைவல் லோரே.()

ஏடணை 3.

வல்லோர்க ளுட்கருவி முப்பத் தாறும்
மகிழ்ந்துரைத்தேன் வைகரிமத் திமையை சந்தி
சொல்லாத சூக்குமையும் வாக்கு நாலுந்
தோன்றுவது குடிலைவிந்து வென்பார் நல்லோர்
இல்லாத யேடணையு மூன்ற தாகும்
ஏதென்றால் அர்த்தேடணை புத்திரே டணையுங்
கல்லாத உலகயே டணைமூன் றாகும்
கடியகுண மொன்பதுமெய் யிருக்குங் கேளே.()

குணம் 9.

கேளப்பா சாத்வீகம் ராசததா மதமும்
கேள்மூன்றி லொன்றில்ரெண்டா யாறு டொன்பான்

தாளப்பா சாத்வீகத்தி லிராசதஞ்சாத் வீகந்
தன்னில்தா மதமிராச தத்தில்சாத் வீகமும்
வாளப்பா ராசதத்தில் தாமதந்தா மதத்தில்
வளர்சாத்வீ கம்தாம தத்திலிரா சதமும்
கோளப்பா யிவையாறு மும்மூன் றுமொண் பான்
குணமாக ராகமெட்டின் குறிசொல் வேனே.()

ராகம் 8.

குறியான காமமுடன் குரோத லோபங்
கொடுமோக மாச்சரிய மிடும்பாங் காரம்
வெறிமதமா மிச்சையறி வித்தல் விருப்பு
வெருப்பினின்ப துன்பமுயிர் செயலோ ரெட்டாம்
அறியும்வாக் காதியினில் விடைய மாகும்
அதுவசனங் கெவனந்தா னம்விசர்கா னந்தம்
நெறிசொல்வச னதியுமோ ரைந்த தாகும்
நேருமிடை பிங்கலைநற் சுளினை யோடே.(123)

பஞ்சபூதக் கூறு.

ஓடாத அத்திசிங்குவை யலம்புடை காந்தாரி
ஓரைந்து வழியோதும் அலம்புடையி னுடனே
நீடியசங் கினியோடு வாய்வு பத்தாம்
நிகரறிய பிராணனுட னபான னுதானன்
தேடாத சமானன்வியா னனிவையோ ரைந்தும்
தெய்வவாய் வாகுமென்பர் நாகனுடன் கூர்மன்
ஓடுகிரி கரன்தேவ தத்தன் தனஞ் செயனு
ருடனைந்தும் பூதத்தின் வாயு வாமே. (124)

ஆமப்பா தோலெலும்பு சதைநரம்பு மயிரு
ஆகஐந்தும் பிருதிவியின் கூறுமென்பார்
ஓமப்பா உதிரமச்சை மூளை விந்து
உவர்நீரா மப்புவுட கூறைந்தாகும்
சோமப்பா நித்திரைபய மைதுனமாங் காரம்
சோம்பலைந்தும் தேயுவுட கூறென்பார்கள்
தாமப்பா ஓடல்நடத்தல் கிடத்த லிருத்தல்
தத்தலுடன் வாயுவின்கூ றைந்தாம் பாரே ()

பாரப்பா குரோதமுடன் லோப மோகம்
படருமத மாச்சரியம் வான்கூ றைந்தாம்

நேரப்பா அக்கினியா தித்தன் சோமன்
நிலையான மண்டலமூன் ருகு மென்பார்
சேரப்பா மூலாதாரஞ் சுவாதிட் டானந்
தெளிந்தமணி பூரகம ஞகதம் விசுத்தி
பேரப்பா ஆக்கினையோ டாதார மாறும்
பெண்ணுடனு ணலிமூன்று முடற்கூ ருமே ()

கூருன பூதபுரி யட்ட மோடு
குணமான தத்துவங்கள் குறிப்பாய்ப் பாரு
ஆருன ஞூவாசயங் கெற்பாசயம் பருவாசயம்
அமர்மூத்தி ராவசய அமாவாசயமோ டைந்தாம்
வேருன வாதமொடு பித்த சேத்மம்
வியாதியது மூன்ருகு மாணவகா மியமும்
வாருன மாயைகர்மந் திரோதைமல மைந்தாம்
வளரன்ன மயம்பிரு ணமயமனே மயமே. (127)

மயமான விஞ்ஞான மானந்த மயமும்
வளர்கோச மைந்தாகும் தோலுதிர மெலும்பு
செயமான தசைமேதை சுக்கிலமு மூளை
செரிதாது யேழாகும் திரோதாய் சத்தி
சுயமான ஞானசத்தி பராசத்தி யிச்சாசத்தி
சொல்கிரியா சத்தியினே டருட்சத்தி யைந்தாம்
நியமான சிருட்டியுடன் திதிசங் காரம்
நிரை திரோபவ மனுக்கிரகந் தொழிலைந் தாமே.

ஐந்தாகுந் தொழிலதிபர் பிரமன் மாயன்
அரன்மகேசன் சதாசிவ னைந்தாந் தெய்வம்
சிந்தையவ்வு மூவ்வுமவ்வும் விந்து நாதம்
திருவெழுத்தஞ் தாந்தீட்சை செறிசமயம் விசே
வந்தநிரு வாணமுடன் அபிசேகத் தோடு (டம்
வளர்தீட்சை நான்காகும் சரிதையொடு கிரியை
சுந்தரயோ கம்ஞானம் பதம்நான் காகுஞ்
சொல்லக்கேள் பதமுத்தி நால தாமே. (129)

மாயை அவத்தை

நாலான சாலோக சாமீபத் தோடு
நலம்பெரிய சாரூப சாயுச்சியந் தான்
மேலான கேட்டல்சிந் தித்தல்தெளி தல்நிட்டை
விளங்கியதோர் ஞானம்நான் காகு மென்பார்
மாலான விஞ்ஞான கலர் பிரளாயகலர் சகலாகலரும்
அறிவித்த ஆன்மபேத மூன்றதாகும்
சீலான தனுகரண புவன போகஞ்
சிறப்பான மாயையொடு நான்க தாமே. (130)

ஆமப்பா ஆகாமியம் பிராரத்வஞ் சஞ்சிதம்
அடர்கர்ம மூன்ருகும் தெய்வீக முடனே
ஓமப்பா பவுதீக முடனூர்த் தீகம்
உண்டான பிரார்தத்வ மூன்ற தாகும்
தாமப்பா புவியந்தரம் சுவர்க்கமுட நாகந்
தனியுலக மூன்ருகும் கேவல சகலசுத்தம்
நாமப்பா காரணமா மவத்தை மூன்ரும்
நன்ருன கேவலகா ரியஅவத்தை யைந்தே. ()

அவத்தையில்லாச் சுத்தகாரிய வவத்தை யைந்தாம்
அருள்சகல காரியத்தி னவத்தை யைந்தாம்
நவத்திசையு மவத்தைபதி னெட்ட தாகும்
நாம்கீழா லவத்தைமத்தி யவத்தைமே லவத்தை
தத்துவமே யென்பர்சித்தர் சாக்கிரஞ்சொற் பனஞ்சுழு
தனித்துரிய மவத்திநிலை தான் துரியா தீதம் (த்தி
அவத்தைகே வலகாரிய வவத்தையென் றுரைப்பார்
அவைகளைந் துமாகுமென்பர் காண்நல் லோரே.

யென்றதுசாக் கரத்தியல்பு சொற்பனசாக் கரத்தி
னியல்சுழுத்தி யென்றசாக் கிரத்தின் துரியம்
அன்றுஅது சாக்கிரத்தின் மேல தாக
அதீதமுடன் சகலா அவத்தை யாகுமத்திற்
துன்றுகா ரியமைந்தா நின்மலசாக் கிரந்தான்
சுத்தவித்தை யைந்தாகும் நிர்மலசொற் பனந்தான்
பண்டுயீசு ரன்முதல்நால தாகும்நிற் மலத்தின்
பகர்சுழுத்தி சகலதத்துவம் மூன்றும்பாரே. (133)

பாரப்பா சத்திசிவம் நிற்மலத்தின் துரியம்
பகர்சிவமே நிர்மலமா மதீத மாகும்
ஆரப்பா சுத்தகாரிய அவத்தை யைந்தாம்
ஆகமூ வைந்துடனே முதலவத்தை மூன்றும்
நேரப்பா பதினெட்டு அவத்தை யென்பார்
நிறைமாயை யொருநாளுங் கூடா தன் னிலையே
ஆரப்பா யிருளேகே வலம தாகும்
அவைமாயை விண் ணுலகா தல்சகல மாமே.

சகலகே வலமிரண்டும் பலவித் தென்றே
தனியிருக்க அன்னியமென் றவத்தை நீக்கி
செகனருளால் பகவனடி யுயிர் பொருந்தல்
சேர்சுத்த அவத்தையென்று சித்தர் சொல்வார்
வகையாகுஞ் சகலகே வலசுத்த மூன்று மித்தை
வகையான வுயிர்களுக்குக் கண்டமைந்தே தென்னில்
மிகையாகுங் கேவலம் ஆணவத்தை நீக்கும்
மேற்சகல மாயையினை நீக்குந் தானே. (135)

நீக்கரிய சுத்தமிரு வினையை நீக்கும்
நிலைமூன்று முயிர்மலத்தை நீக்கவந்த தாகும்
நோக்கரிய யிந்திரியம் பத்துமாத் திரைதான்
நுண்மையீ ரைந்துமந்தக் கரணம் நான்கு
தாக்கரிய வாய்வுபத்து உயிருங் கூடித்
தானறிதல் சாக்கிரமமா மிந்திரியம் பத்துந்தள்ளி
ஊக்கமிம் மூன்றுடனே சொற்பனமாம் பிராண
ஞேடறியச் சித்தமுடன் சுழுத்தி யாமே (136)

ஆமப்பா பிருண னுயிர் துரிய மாகும்
அபான னுமே தானுத லதீத மாகும்
ஓமப்பா தூலவுடல் சாக்ர மாகும்
உடல்சூக்ம சொற்பனமாம் பிரகிருதி யுடல்தான்
தாமப்பா சுழுத்தியதா மோகினியே துரியம்
தனியான மலவுடலே ஆக்னை யைந்தாம்
நாமப்பா சிவதத்துவ மைந்து தானும்
நல்லமே லாம்வத்தை பொருந்துமுயிர்க் குடலே.

உயிரான ஐவகையாம் அவத்தைகள்சாக் கிரத்தில்
உணர் தான்முன் னறிந்தவனைக் கண்டறியா திரு
மயலறும தீதநிலை யெழுதலே சுழுத்தி (த்தல்
மயல்புரியட் டகம்பொருந்திப் பகுத்தறியா அறிவால்
அயற்வுடனே ஐயமுற வுறைத்தேன்சொற் பனமாம்
ஆனந்தத் தாலவுட லடைந்துவரு மறிவால்
தயவுடனின் ஞனிவன்று னென்றறிதல் தானுஞ்
சாக்கிரத்தில் சாக்கிரமென் றுரைப்பர்பெரி யோரே.

பெரியபொறி யினிலொன்று பூத மொன்று
பெரியகர ணம்நான்கு கலாதி யேழு
அரியசிவ தத்துவமைந் தாகக் கூடி
அனுபவனோர் புலனுகர்தல் சாக்கிர மென்பார்
தெரியாது கருவியொன்று தன்னைக் காண்டல்
தேர்வதுசொற் பனபரையாந் தனைக்கா ணுதல்
உரியபரம் பரைநிறைவே சுழுத்தி யாகும்
உண்மைஞா னானந்தந் துரிய மாமே. (139)

ஆனந்த மானதொரு சுகிர்தநிலை யிதுவே
ஆமங்கள் நாலேழு மறையுநான் மறையே
தானந்தப் பூதமுத லாமவத்தை யிதற்குத்
தத்துவத்தின் சகலதுறை கேட்கிலப்பா
ஊனந்த யிருநூற்றி யிருபத்தி ஆறு
உயிர்க்கிதுதான் தனுகரண புவனபோகம்
ஆனந்தத் தத்துவத்தை நானென் றெண்ணி
அழுந்தியிடும் பெற்றமிது வாகுங் கேளே. ()

கேளப்பா யெனையாண்ட தெட்ச ணேசன்
கிருபையுடன் தவத்தாலே குருவாய் வந்து
தாளப்பா நாமறிய விப்போம் நீதான்
தன்னறிவு தத்துவங்க ளுள்ள தெல்லாம்
நீளப்பா தத்துவத்தை விட்டு நீயும்
நேருக யென்னிடத்திற் சேர்வா யென்று
தாளப்பா திறந்துமுத்தி நெறியைக் காட்டிச்
சரணடையும் வீட்டின்பந் தருவார் பாரே. (141)

தத்துவ தெரிசனம் பஞ்சபூதக் குணம்.

பாரப்பா தத்வரூபங் கருவி யெல்லாம்
பாங்கான தெரிசனமுஞ் சுத்தி சொல்வேன்
காரப்பா பிருதிவிசுக் கென்ற அப்புத் தானே
கடைசியந் தரந்தேய்வு சுடரென்ன லாகும்
நீரப்பா பொருளதனைத் திருடுதல்கா லென்பார்
தேய்வரவே நித்தவா காசத்தின் குணமாம்
சேரப்பா தோத்திரத்துக் கிடங் கொடுத்தல்
செவிக்குணம்விண் ணிடை நின்று சத்தமறிவதுவே. 142

அறிவதுவே தோத்திரத்துக் கருவி வாக்காம்
அடர்வசனம் வாக்கினுக்கு விடைய மென்பார்
உருகோலம் குணந் தொக்கு யிடங்கொ டுத்தல்
உற்றகுணங் காலிடமாய்ப் பரிசமறிந் திடலாம்
செரிதுவதுக்குக் கருவியது பாத மாகும்
சேர்கெமன மென்பதற்கு விடைய மாகும்
நரிமண்டுங் குணஞ்சட்சுக் கிடங் கொடுத்தல்
நற்குணந்தீ யிடை நின்று வுருவமறிந் திடலே. (143)

இடம்விழிக்கு நாக்கருவி பாணி யாகும்
யிதன்விடைய மிடலேற்ற லாதுமென்பார்
அடலரிக்கக் குணம்சிங்கு வைக்கொ டுத்தல்
அதற்கான குணமீதில் நின்றுரச மறிதல்
தொடுநாக்குக் கருவிபா யுருவா யதற்குச்
சொல்விடையஞ் சரவிடையம் அளிப்பதுவா மென்பார்
கருநிலத்துக் குணம்நாசி யிடங்கொ டுத்தல்
காங்குணமண் ணிடை நின்று மணமறிதல் காணே

காணுமாக் கிராணத்துக் காங்கன்னி யுபஸ்தங்
கணவானந் தமதற்கு விடையமென்பா ரறிவோர்
தோணுபிரு திவியுரத்துத் தரித்திடுத லுருவஞ்
சொரூபமுதல் நாற்கோணங் கிடைத்தல்சுபா [illegible]த்தான
வேணுசிறப் புவிசேடம் வானின்ன [illegible]
வியாகிர்தியது சதகோடி யோசனை வியாபகமாம்
ஊணுநல்ல மணிபஞ்ச லோகநிற மாகி
உடலுண்மை வகையாகி விரிதலுயிர்க் குணமே.

பூதக்கூறு.

குணமாகும் போததை நீ ரளித்திக்
கூடியே பாந்துமே சொரூபஞ் செய்ய
இனமாகும் கலந்துமே சுபாவ மாக
ஏகமாய்த் தன்சொரூபஞ் செய்யும் போது
அணிநீர் விசேடமாய் மண்ணளவி யார்த்தி
அதுமண்ணிற் பதின்மடங்கு வியாபகமாய் விரிந்
தனியேழு சாகரமாய்ப் பிரளயங்க ளாகித் (தே
தனுவினிற்கா ரியமைந்தாய் தனி நிறம் வெண்மையதே.

வெண்மைகுணங் கண்டுடலி லவையறிதல் காட்சி
விளங்குபுனல் சடமாமென் றகன்றிடுதல் சுத்தி
தொண்மைஅன லுருவம்சுட ரென்றுதிரி கோணம்
சொரூபமெழு தற்சுவாவம் பொருமைவிசேட மதாம்
உண்மைதன விகாரக் கினியளவ தாகும்
உற்றதுபஞ் சாக்கினியாந் தேசிசத்தி கோடி
வண்மையோ சனைவிரிந்தே சடத்திலுண்மைவகையாய்
வள்ர்வதுவி யாபகமாம் குணம்அனலின் ஒளியே. ()

ஒளியந்த விளக்காக வொளிருநிறஞ் செம்மை
உற்றுயிவை யறிதல்தெரி சனம்சடமென் றறிந்து
தளல்வினைவிட் டகல்சுத்தி சமீரணன்றன் னுருவம்
சவித்துமிகத் திரட்டல்சட் கோணமாஞ் சொரூபம்
வளிதெரிய நிற்றல்விசே டம்சுபாவம் நேரில்
வளிவியாத்திரி வியாபக மளவுவியா பகமாம்
வெளிநூறு யிரங்கோடி யோசனையாய் விரிந்தே
விரிந்துஅது வாகியிந்த மெய்யிலறி வகையே.

வகையாக வியாபித்த வளிநிறமே கருமை
வளர்ந்தகுணம் பிரித்தலிவை யறிதல்தெரி சனமாம்
துகைசடமென் றரிந்துவிட லசுத்திவா னுருவந்
தொனியாகி நிறந்தரமா யிடங்கொடுத்தல் சொரூ
பகைவட்ட மசையாது நித்தலாஞ் சுபாவம் (பம்
பகருவிசே டமுமுண்மை சத்திதத்துவத் தளவாம்
மகவையதில் வியாபகங்கொள் கும்ப கத்தின்
மடங்கலாய் விரிந்தடங்கி யைம்பூத மாமே. (149)

பூதமெல்லா முள்ளடக்கச் சடத்திலுண்மை வகையாம்
புகழ்நிறங் குணந்துகையிற் சுடர்கோசங் காசம்
பேதகமாம் புகைநிறமாங் காண்டல்தெரி சனமாம்
பிரித்திதனைச் சடமாமென் றறிந்துவிடல் சுத்தி
சோதிமறை மொழியிதுவாம் பத்திடுதல் மனமாம்
துரியமதி நிச்சயத்தால் புத்தியெழுந் திடலால்
போதமளிந் திடில்சித்தங் கரணம் நான்கும்
புகழ்கருவி மூவெட்டின் பொருளைக் காணே. (150)

காணப்பா பூதமைந்தி லொன்று நான்காய்க்
கடியவைந் தாகுமதைக் கருவாய்க் கேளு
தோணப்பா ஆகாசம் நாலு கூறாய்த்
துரியத்தி லொருகூறில் வாய்வூரி லான்மா
மாணப்பா உருகூரு மங்கியினை மருவில்
மருவியது புத்தியொரு கூறாகிப் புவனை
வீணப்பா சித்தமதா மொருகூறு மண்ணில்
விரைவுடனுங் காரமாம் வெளியுடனைந் தாமே. ()

ஆமப்பா வாய்வுநான்காம் விண்ணிலது வோடி
அதுகலக்கிற் சமானனு மனலொருகூ றுதானன்
தாமப்பா செலமொருகூ றதுவூறி லபாணன்
தரணியொரு கூறூறிற் பிருண னாகும்
தேமப்பா முதல்வாய்வு வியான னாகும்
தேயுவாய் வென்பார்கள் அதையும் பாரு
போமப்பா அக்கினியும் நான்குமொரு கூறு
புகல்வானில் செவியாகும் காலொருகூ றுடலே.

ஒருகூறு நீரிலுறில் நாவுமென உரைப்பார்
ஒருகூறு வளியூறி லுருநாசி யாகும்
ஒருமுதல்சச் சுடனைந்தாம் நீரில் நான்காம்
ஒருகூறு அண்டமுறிற் சுரோத்தமதா மென்பர்
தெரிவளியி லொருகூறு செவிபரிச மாகும்
தீயிலொரு கூறுவிர விடிலுருவ மாகும்
தெறியொருகூ றவனியதிற் கெந்தமதா மென்பார்
நீரில்மூத லாகாசம் நிமலமறை மொழியே. ()

மறைமண் நால் வகையாக ஒருகூறு வானில்
வரிவாக்காம் வாயுவினி லொருகூறு வாயி
உறைபாத மாமனவி லொருகூறுல் பாணி
உள்ளபாணி யாமனலி லொருகூ றபானன்
மறைவெறுமண் முதலுபஸ்த மைந்தா மைந்தில்
அளிவலிட மாகிமனஞ் சஞ்சலமாய் நிறையும்
பறைதீயி னிடம்புத்தி பண்ணிநிச் சயங்கள்
பாணியிடஞ் சித்தமது சஞ்சலிக்கும் பாரே. (154

சலியாம லாங்கார மண்ணிடமாய் நின்று
தனியபிமா னம்புரியும் வேதாந்த முறைக்கு
நலியாமல் வேதாந்தஞ் சித்தாந் தத்தை
நாதனரு ளாலுரைத்தோம் நால்வர் கேட்கக்
கெலியாத பொருளேது யெழுத்தஞ் சென்றான்
கெடியான பொருளாவி மாய்கைமல மென்றான்
ஒலியான வேதாந்த சித்தாந்த வேத
உன்னிலது உரைப்பதெல்லா மெழுத்தோ ரஞ்சே.

அஞ்செழுத்தே யருமறையா கமங்காவிய மந்திரம்
மளவில்பதி னெண்பாசை கோடியண்ட பிண்ட
அஞ்செழுத்தே யகிலநரர் மிருகம் பட்சி
அசைவுளமற் றுயிர்தோறு மெவ்வுயிர்க்கு மசைவ
அஞ்செழுத்தை யன்றிவே றென்று மில்லை
அஞ்செழுத்தி லுதித்தொடுங்கி அஞ்செழுத்தில் தோன்று
அஞ்செழுத்தே சிவசத்தி யாவியிது மூன்றும்
அதுகாண மல்மறைத்து விடுந்திரோதா யிருளே

இருட்கீரி லவாயிரவி யம்மனைக்கு வாளாம்
இருவினைக்கு மருந்துவிலை யில்லாத கனகம்
மருட்பொசிந்து பசிதீர்க்கு மானந்தக் கனியாம்
மருட்பிறவிக் கரியுமருட் பாரு லாவும்
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ...
குருட்டகன்று பார்த்தறியாக் குறைவிலா நிறைவாம்
கூறியவே தாகமஞ் செழுத்தாமு வினையே. ( )

மூவினைசெய் விப்பவனே நவ்வினையைச் செய்து
முடிப்பதரு ளொத்திருந்த திரோதா யொன்று
ஆவியென்றவ் வினைச்சுகமா யிருவகையு மறைப்பாய்
அறியவொட்டா தேமறைத்த திரோதாயி யொன்று
ஓவியென்ற யிருவினைவித் தாகுமல மொன்றில்
உருவமா மஞ்செழுத்தின் பயனிதனை யுணர்ந்து
கோவினரு ளால்மாயை நீக்கியவ னடியில்
கூடியுயி ரணைந்தவன்றே கொடியமல மருமே.(158)

பதிபசு பாசம்.

மலமிலா னுடனருளு மாயையுமே பதியா
மதில்மூன்று வகையாகும் பசுவாகு மென்பார்
நலமிலா மலமதுதான் பாசவுரு வென்பார்
நாடரிய யிம்மூன்றும் நித்யமென நூல்கள்
குலமிலாப் பதியாவ தெனி னிவர்கள் நினைத்த
குறியுருவ மாகிஅப்பாற் குறியுமாகி
நிலையுணரும் சத்துமன்றி யுணர்வேது மின்றி
நின்றவனு லசையாத நின்மலகு னியனே. (159)

சிவ லட்சணம்.

சூனியனு யுருவமன்றி யரூப மன்றிச்
சொற்குணங்கள் மூன்றுமன்றி நடுவிற் தோன்றி
ஆணியா மலனுன்கு மொன்றுமல மின்றி
ஆவியது காயத்துள் அடங்கியிருப் பதுபோல்
மோனமே யெவ்வுயிர்க்கு மூயிராய் நிற்பன்
முதுமையின்றி யிளமையினறிப் போக்குவர வின்றி
ஞானஉரு வாயெங்கு நிறைந்து நின்ற
நாதனுரு யின்னதென்று விளம்புதற்கு யரிதே. (160)

( இருவகையுந் தெரியாமல் மறைத்த தென்ற, பிரபஞ்சத் தோன்றே கூடி நிச்சயித்தே, ஞானத்தை மறைத்து, ஆணவ மலம் பெருத்து நிற்கும் மற்ற ஞானத்தாலே, ஆணவமலம் நீக்கி, இன்பத்தைப் போசிக்க வொட்டாமல், அந்த மாயை போகத்தி லான்மாவுக்கு விருப்பத்தைக் கொடுத்து, சர்வ பிரபஞ்ச மெல்லாம் போய் யென்றே கண்டு, ஞான வின்பத்திலே யிரு வகையா மென்றார். )

அரியவுரு வாகியின்ப மளவி லாத
ஆனந்த வடிவாகி நிற்ப தாலும்
பெரியவனை யுண்மையென நம்பினோர்க்கும்
பேதமுற்று மருத்தவர்க்கு மோட்ச மீய்ந்து
யிருவினையின் பயன்களையுங் கொடுத்து நிற்பன்
யெவ்வுயிர்க்கும் பெரியவனெல் லாவுயிர்கு மாகி
கரியசர்வத் தையுமறிவன் றொழிலெல் லாம்செய்
காரணகா ரியங்கடந்த காரணகா ரணனே. (161)

காரணமா யரியமரர் சித்த ரெல்லாம்
கருணையுடன் கொடுக்கிறவன் கண்டறியா னெவர்க்கும்
பூரணனு முயிர்கண்டு பூசிக்கும் படிக்குப்
புகலரிய பலவுருவ மெடுத்துக் கொண்டு
ஆரணமு மருளியெல்லாப் பணிவிடைபூ சையுங்கொண்
டருளியே பணிக்குத்தக்க பலனதையுங் கொடுப்பன்
நாரணனு நான்முகனுங் கீழ்மேல் தேடி
நாடறியா னெவ்வுயிர்க்கு முளவாம்நா யகனே. (162)

அடி நாரணன், நடு ருத்திரன் முடி பிரமன்.

நாயகன் அகண்டிதன் அசலன் அநித்தியன்
நாட்டினிலே கேள்வியன்றி தேவர்களு மறியாத்
தூயகன் துயரறுத்த உண்மை நாமன்
துரியாதீத னனந்தன் சொரூபா னந்தன்
காயகமா நாதாந்த யெழுத்தெல்லாத் துக்கும்
காரணனு முயிர்போ லறிவாகி யெங்கும்
தாயகமாய் நிறைந்துநின்ற ஆதி நடு வந்தந்
தானன்றிக் குறியுருவ மன்றிநிற்பன் தனியே. ()

தனியான பிரமன்மா வீசன்ரு னந்த
தனியுருவா மீசுரனு யருவுருவா மென்றூர்
அணிவிந்து நாதமுடன் சத்திசிவ னுலும்
அருவுருவ மாகுமென்பா ரென்பான் ரூனும்
அணிவிமலன் மெய்வடிவ மூன்னுருவ நான்கும்
அருவுருவ மென்றசூக்கும தேக மென்பார்
கனியவரு நான்குமவன் காரணதே கமதாம்
கண்மனவாக் குக்கெட்டாக் கண்ணினுட் கண்ணுதலே.

கண்ணுதலை யனுட்டித்துச் செபித்துத்தியா னித்துக்
கசிந்துருகி நிற்பார்க்கு நாலுருவங் காட்டி
நண்ணரிய வஞ்சுசத்தி யுடன்பூ சித்து
நாடிநிற்பாற் கருவுருவ மொன்று காட்டி
மண்ணதிலே யட்டாங்க யோகத் தாலே
மவுனமூத்தர்க் குருவமொரு நாலுங் காட்டி
விண்ணறியு மூன்றறிந்தார்க் கிந்த மூன்று
மேலாமா னந்தவெள்ளங் காட்டு வானே. (165)

பஞ்சமூர்த்தி பஞ்சசக்தி. (சத்திகள் **12.**)

காட்டியெங்குந் தானாகி யப்பா லாகிக்
கரைகாணாப் பேரொளியில் கலந்து நிற்பான்
மூட்டியவன் திருவுருவே திசவிதமா மென்று
மூயன்றசத்தி யீரா றுடனே மூயல்வார் கேளு
ஊட்டியவிச் சாசத்தி ஞான சத்தி
உயர்ந்தகிரி யாசத்தி யாதி சத்தி
நாட்டியதோர் பராசத்தி யைந்துங் கூடி
நாதாந்தங் கடந்தயிறை யுருவம்பாரே. (166)

பாரப்பா சிவத்துக்குச் சுத்த சத்தி
படர்நாதந் தனக்கரிய விந்து சத்தி
நேரப்பா சதாசிவற்கு மனோமணியாஞ் சத்தி
நேரான யீசுரர்க்கு மயேசுபரியாஞ் சத்தி
சாரப்பா ருத்திரர்க்கு ருத்திரியாஞ் சத்தி
சார்வரிய விட்டுணுவுக்கு லக்குமியே சத்தி
பேரப்பா நான்முகற்கு வாணி சத்தி
பேசரிய விநாயகர்க்கு வல்லபையு மாமே. (167)

ஆமப்பா பரைதானே ஆதி சத்தி
ஆகவே யீராறு சத்தியாலே
ஓமப்பா தூலபஞ்ச கிருத்தியத்தி னோடே
ஓதரிய யோகசூக்ஷ கிருத்திய மென்பார்
தாமப்பா அனுக்கிரக பஞ்சகிருத் தியமுஞ்
சார்வரிய மூவைந்து கிருத்தியமென் பார்கள்
நாமப்பா மூவைந்து கிருத்தியமுஞ் செய்து
நாதனுனந் தரமாக நடஞ்செய் வானே. (168)

ஆத்மாவின் லட்சணம்.

வானென்ற ஆத்மாவின் லட்சணத்தைக் கேளு
வளர்ந்தஉயி ரளியாதாய் பிறப்பிறப்பில் லாதாய்
கோனென்ற யிறைபோலே யளியாத வடிவாங்
கூடியவஞ் ஞானத்தோ டிடைவிடா திருக்கும்
தானிருப்ப தெப்படி அரிசியுந் தவிடுபோலத்
தண்ணீருக் குப்புப்போ லும்செம்பி னுக்கு
ஊனமாங் களிம்புபோற் கலந்துநிற்கு மலமும்
உயிருவமை யொருகோடி யுண்டுரத்துக் கேளே. (169)

உயிர் மல மயக்க உவமை.

கேளப்பா உயிரைமல மயக்கிறதைச் சொல்வேன்
கிளர்குழந்தைப் பருவத்தில் மயக்கிறதைப் போ
நாளப்பா நோய்உயிரை மயக்கிறது போலே (லும்
நரகமது உண்டவனை மயக்கிறது போல
கோளப்பா ஆணவந்தான் மயக்கிறது போலும்
கொடியஉயிர்க் காசையுண்டாம் நல்வினை தீவினையில்
வாளப்பா பசிசோற்றி லாசைசெய் வதுபோல்
வருத்தும்நோய் மருந்தாசை வைப்பதுபோற் றனே. ()

பொற்றறடு காலிலே யாசையுண்டாக் கிறது
போலவுமிப் படியனந்த சாமீப முண்டு
ஏற்கைமலங் கொடுத்தாசையை ஈசரவர றிந்து
மியல்பான தனுகரண புவனமின்போ கங்கள்
மார்க்கமிடை விடாமலே மாற்றி மாற்றி
வரிசையாய்க் கொடுத்துப்பின் னேயிருப்பான்
பார்க்கப்பிணி யாள்மருந்தி லாசைப்பட்ட வனுக்கே
பண்டிதன்றா னும்மருந்து கொடுக்கிறது போலே (171)

போலிதுயிர்க் கனுதியுள்ள செய்தி யாகும்
புவனத்தி லெவ்வுயிர்க்கு மிச்சையுந் தொழிலும்
கோலியெந்தக் காலமுந்தா னிடைவிடா திருக்கும்
கூறிமூல மலங்கூடி யிருக்கிறதோ ருயிர்க்கு
ஆலத்தில் விஞ்ஞான வாக்குக் கன்மம்
ஆணவமுங் கூடியிருக் கிறவுயிர்க்கு நாமம்
மூலபிர ளாயகல ருமாயை கன்மமுடன்
மூலமதத் தார்நாமஞ் சகலமென்பார் முறையே. (172)

முறையான கேவலவிந் ஞானகல ரென்பார்
மூனையட்ட விக்கிமயே சுரசதா சிவனார்
அறையாத நால்வேதத் திரத்தா ரோடு
ஆணவத்தை விட்டதுவே சுத்த ஆத்மா
மறையுதவு மெழுகோடி மகாமந்திர முதலாய்
மாயகர்மம் விட்டகன்ற மகாத்மாவா மிவர்கள்
அறையாத எத்தொழிலும் செய்ததது நின்ற
ஆணவத்தா ரென்றுமறை யாகமஞ்சொல்வதுவே. ()

சொல்வர்கிரு மலத்தாற்தா னனேக பேதஞ்
சோதி ருத்திர ராசிகண்ட மண்டலேசர்
வெல்வர்குரு உபதேசம் பெற்றமுத்த சித்தும்
வேறான முத்தசித்த பெத்ததத்தி னுடனே
கல்விதரு பரமாத்மா வந்தார் மாறு
கலையாத்மா பூதாத்மா திரவாத்மா சீவாத்மா
வெல்வதுமுத் தாத்மாசித் தாத்மா வோடு
வேறான சீவாத்மா வோரெட் டெண்ணே. (174)

சகல ரென்றதற்கு விபரம்.

யென்னப்பா சித்தாத்மா பிரளயாகல ரென்பார்
யியல்பான முத்தாத்மா யாரென் றுக்கால்
முன்னப்பா வளவிலாப் பிரம ரோடு
மூகில் நிறமா மெழுகோடி விட்ணு வோடு
மண்ணப்பா முன்சொன்ன உயிர்வர்க்கம் விட்டு
மற்றுமுள்ள அளவில்லா உயிர்கட் கெல்லாம்
பின்னப்பா சகலகல ரென்று சொல்வார்
பெரியசிவா கமங்களால் பிரமாண மாமே. (175)

ஆமப்பா யிருவரையுஞ் சகல ரென்று
வரைந்ததென்ன வென்றுசொல்லி மற்றோர் கேட்கில்
ஓமப்பா அஞ்செழுத்தின் பரமாத்ம வாலே
ஒடுங்காத பிரமாவு மொடுங்கின ரப்பா
தாமப்பா சகலருக்குந் தாது வென்றே
தானிருவர் தாதுவெங்கே யென்று யானால்
காமப்பா பிரமனுட முடி யறுத்துக்
கரத்தில்வைத்தான் மேருஒற்றக் கையாங் காணே.

கையில்வைத்தார் மாப்பிரளையகா லாக்கினி யாலே
கரிந்துசுட்டா ரரியயனை யுகாந்தந் தோறும்
மெய்யில்வைத்த திரிபுரையா ளவர்களையுண் டாக்கி
மேதினியெல் லாம்படைத்தான் காத்தான் பின்னும்
பொய்யில்வைத்த புவனமதி லிருவர்முத லுயிர்கள்
பொடியாக்கி யவருடலை நீராய்ச் சுட்டு
செய்துமே னியிலணிந்தான் எலும்பையெல்லாம் மாலை
செய்துசிர மார்பில்வைத்தான் சிவனார் காணே. (177)

கபால பிச்சை.

காணப்பா சிவன்றானும் வைகுண்டத்தில்
கபாலபிச்சைக் கெழுந்தருளிக் காளவேகர்
பூணரிய மகாபூதப் படைக ளோடு
போகிலவர் வாசலி லிருந்தவிட் ணு சேயன்
தூண்பெரிய சிவனையங்கே தடுத்த போது
துட்டபூ தம்விட் ணு சேயரைத்தான் கொன்று
காண்பரிய ரத்தமுண்டு களித்தாடும் போது
கடுந்தார பாரத்தி லரியெழுந்தார் பாரே. (178)

எழுந்துவந்து யீசுரனை நமஸ்க ரித்து
இங்குநீர் வந்ததென்ன வென்று கேட்க
கழிந்துநின்ற பிச்சைக்கி வந்தோ மென்ன
கபாலந்திர வென்றுசொல்லி மாயோன்றன் மேனி
பிழிந்துரெத்தம் அவரிடத்தில் துறந்து விட்டான்
பேரான பாத்திரந்தான் காணி யாச்சு
மொழிந்தரத்த மெல்லாய்போய் மாயன்றானும்
மூர்ச்சித்து வீழ்ந்தான்பின் மொழியக் கேளே.

கேளப்பா பிரமன்முதற் தேவ ரெல்லாம்
கிரீசன்றன் பாதத்தில் விழுந்து போற்ற
வாளப்பா மாயவனை யெழுப்பி விட்டார்
வந்தரெத்தம் என்புதலை தாதுவல்லோ பாரு
தாளப்பா தாதுவைத்தா னறிந்து பார்க்கத்
தனுவென்னுந் தாதுவினால் சிவனுக் கென்னில்
வாளப்பா தேகமெல்லாம் நெருப்பென்று பெரியோர்
மறைதானுஞ் சொல்வதினால் தாதுவில்லை பாரே. ()

தாதுகளாக் கினிசேர்த்து நில்லாதப்பா
 தழல்தரித்தோன் கையிலே தாது வென்றார்
சூதுபா ரேதுகரு நாகமுண்டு தாது
 உடநின்று ரைவருக்கும் நாச மில்லை
பேதிக்கி லிவர்தாது வேறெடுத்துத் தரித்தார்
 பொய்யாத யிருவருட மாச்சரிய மென்றார்
சாதிக்குஞ் சம்மார மூர்த்திக் கேகல்
 லாருண்டு சித்தரெல்லா மறிவார் பாரே. (181)

அமிர்தங் கடைதல்.

பாரப்பா அயனரியுந் தேவ ரெல்லாம்
 பாலாழி யமுர்தத்தைக் கடைந்த போது
சாரப்பா மயேந்திரத்தை மத்தாய்ப் பூட்டி
 தனியான சேடனைத்தான் கயறாய் மாட்டி
நேரப்பா சிவனைவிட்டுக் கடைந்தா ரப்பா
 நெருப்பான மேனியன்று னினைத்த போது
தாரப்பா சேடனுட விடந்தான் பொங்கி
 தனியான பாலாழி யுலகு தானே. (182)

உலகுகொல்லாப் பாலாழி யொன்றுக்குக் கோடி
 உண்டாக்கிக் கனலுருவா யோடிச் சென்று
வலகுகொல்லா வயனரியை ரிசிதேவர் முனியை
 வாட்டிடவே யெல்லோரு மலரி வீழ்ந்தார்
கலகமிலா யீசுரனை நினைத்த போது
 கடாட்சிப்பே னென்றுசொல்லி முன்னே வந்து
உலகுகொல்லா விடக்கடலை ஒருதுளியாய் வாங்கி
 உண்டான்கா ணெவ்வுருவுங் கொண்டான் காணே.

திரிபுர மெரித்தல்.

கொண்டதிரி புரத்தாரைப் பிரமன் மாலும்
 கோடிகற்பஞ் சண்டைபண்ணி செயமில் லாமல்
கண்டனுமால் மீனுருவாய்ச் சாகரத்திற் சென்றான்
 கமலனன்ன மாகியண்டங் கடந்து போனான்
விண்டசிவன் தனையங்கே தியானித் தப்பால்
 வேண்டியதே தென்னவென்று முன்னே வந்தார்
பண்டிருந்த புரத்தாரை யெரிப்பா யென்று
 பங்கயன்மா லுரைத்தபின்பு பதிசொல் வானே.

வானவர்கள் முனிவர்சித்த ரிஷிசர்
மகாருத்ரர் மகாவிட்ணு நான்முகத்தா ரோடு
தானவர்சூ ரியர்கிரகர் சந்திர ரெல்லாம்
தான்கூடி யேதேர்கள் சமைத்துக் கொண்டு
பானுன மேருவைவில் லாய் வளைத்து
பாம்பாதி சேடனைத்தான் கயிருய்க் கட்டி
ஆனுன புவியளந்தோன் பாண மாக
அம்புயத்திற் கொண்டவரை வெல்வே னென்ருர்

என்றுசிவ னருளியதை விட்ணு கேட்டு
இப்படியோ தன்சமத்து பத்திவைத்துச் சிவனை
குன்றுபிர மன்ருனு மாலுங் கூடி
கோடிநகர் திரிபுரந் தன்னைப் பார்த்து
நன்றுநமக் கிவரெதிரி யென்றிறங்கி நிற்க
நான்முகனும் வானிலுள்ள வானவரும் பார்த்து
யின்றிவர்தான் செயிப்பாரோ நாமில்லா விட்டால்
யெனநினைத்தார் சாம்பவரும் நகைத் திட்டாரே.

விஷ்ணு ரிஷபமானது.

நகைத்திடவே புரமெரிந்து நீருய்ப் போச்சு
நாதனங்கே ரதத்தைவிட்டுக் குதித்தா ரப்பா
திகைத்துடலம் நடுங்கியே ரிஷப மாகத்
திருமால்தான் தாங்கினுர் சித்தர் சொல்வார்
தகைத்திடவே சலந்தரன்தான் பிரமன் மாலோடு
சண்டையிட்டுத் துரத்திடவே யிவர்கள் சென்று
திகைத்திடவே சலந்தரனைக் கொல்லு மென்று
சிவனடியில் வீழ்ந்தார்மால் தேவர் தானே.(187)

சலந்திரனைக் கோன்றது.

தேவாதி தேவனந்தச் சலந்தரனைப் பார்த்துத்
திறமாகச் சண்டையிட்டான் வெகுகால மாக
ஆதியென்ற சிவன்செயிக்க மாட்டாமற் தான்
அடிநெகத்தாற் கீறினுன் ஆழி போல
கோவியென்ற சலந்தனையுந் தூக்கச் சொன்னுர்
கூசாமல் நினைத்தவரந் தருவே னென்று
பாவியென்ற சலந்தரன்தான் தூக்கும் போது
பாரெல்லாம் சக்கரமொன் ருகத் தானே. (188)

சிவன் விஷ்ணுவுக்கு சக்கரம் கொடுத்தது

சக்கரமாய் மேலெழுந்து சலந்தரனைக் கடிந்து
தலையறுத்து யிரத்தமுண்டு நமஸ்கரித்த அப்பால்
அக்கணமே அறிந்து அரி சிவனைப்பூ சித்தான்
அம்புயக்கண் ணுடே அர்ச் சித்தா னப்பா
மிக்கசிவன் வெளிப்பட்டு வேண்டியதே தென்ன
மெய்யான சக்கரந்தான் வேணு மென்றான்
முக்கியமாய்ச் சக்கரத்தை யீய்ந்தா ரப்பா
முன்னடந்த சிவன்பெருமை மொழியக் கேளே ()

தக்கனை வதைத்தது.

மொழியாத யாகபலன் தக்கன் றானும்
முகுந்தனுக்குக் கொடுக்க அவன் செய்யும் போது
விழியான சிவனைவிட்டெல் லோருங் கூடி
விரைந்தங்கே செய்குவதைச் சிவ னறிந்து
அழியாத வீரனையுண் டாக்கி யாகம்
வளர்த்தவரை யழித்துவா வென்று விட்டான்
கழியான வேள்வியிலே சென்று வீரன்
கடகத்தா லரிமுடியைக் கடிந்தான் பாரே.(190)

கடிமலரோன் கன்னத்தி லடித்துமுடி திருகி
கதறியவ னடிபட்டு விழுந்த போது
முடிவாணி நாவுள்ளே யிருந்தாள் கண்டு
முடியயிரைப் பிடித்திழுத்து மூக்கறுத் தான்
அடியான குண்டத்திற் சமித்தை வாங்கி
அக்கினியின் கையிலோ ரறை யறைந்தான்
வடிவுடைய சூரியனைப் பல்லு டைத்து
மதியினைக்கா லால்தேய்த்தான் மயங்கத் தானே.

மயங்கிவிழத் தக்கன்முடி யறுத்தான் பின்பு
வானவரைக் கடகத்தா லடிக்கும் போது
தியங்கியே பட்சியாய்ப் பறந்து போனான்
சிவனை விட்டுச் செய்ததவம் விழலாய்ப் போச்சு
நயங்கொள்ள ஈசனையெல்லாப் புவனத் திற்கும்
நாதனால் அரியய னவருந் தன்னை
செயங்கொள்மா மிசஞ்சுமக்கச் செய்து ஈசர்
திருவடி பணிந்து நிட்டை செய்தா ரென்னே. ()

மன்மத தகனம்.

செய்திருக்கி லரியயனுஞ் சூரனுக்குப் பணிந்தார்
செய்வதுக்காற் றமலவர் தேவியிடஞ் சென்று
வையகமும் பாழாக்கி அரிஅயனும் பின்னும்
வானவரும் தீசர்மய மாகிப் போனார்
மையரும் விழியாளே சிவன்றன்னை யெழுப்ப
மன்மதனா லாகுமென்று அரிதான் சொல்ல
தூய்பச்சை நிறத்தானு மாரனையுண் டாக்கி
துரிதமாய்ப் பாணம்விடச் சொன்னார் காணே (193)

சூரனைக் கொன்றது.

சொன்னபடி மதன்கேட்டுச் சிவன்முன் சென்று
சுரும்புணு னேற்றிவிட்டுத் துளைக்கக் காமன்
மன்னரனு மேதென்று விழித்துப் பார்த்து
மன்மதன்றான் பொடியாக யெரிந்து போனான்
கன்னியுட னயன்மாலும் பதத்தில் வீழக்
காட்சிபெற்று மலையரசன் மகளை முன்னால்
முன்னாகக் கலியாணஞ் செய்த பின்பு
முருகனாற் சூரன்மாள முடித்தான் பாரே,(194)

மாபலி விபரம்.

பாரந்தச் சூரனைத்தான் கொல்லா விட்டால்
பங்கயன்மா லேதிந்தப் பாரி னுள்ளே
தெரிந்த மறைக்காட்டில் வந்த தீபம்
திரிமயங்கி யெரியும்போ தெலிதான் சென்று
சேர்ந்தபசி யாலெண்ணெய் யுண்ண மூக்காற்
துடைத்தங்கே திரிதூண்டி விளக்குநன்று யெரிய
வேரந்தச் சிவன்றானு மெலியைப் பார்த்து
வேண்டியது யேதுனக்கு விளம்பு வாயே.(195)

தாயான தயாநிதியே யடியே னுக்கு
சாகாத வரமுடனெல் லாவுலகும் வேணும்
நேயமாய் வானவர்கள் பணிதான் செய்து
நிற்கவுந்தான் வரம்வேணு மென்று கேட்க
தாயவனே யெளியவன்றான் கேட்ட தெல்லாம்
தந்திடவே சுக்கிரனமந் திரியு மானான்
நாயகனும் மாபெலியாய்ப் பூமி யெல்லாம்
நாடுவாய் மண்வடிவாய் மால்வந் தானே. (196)

விஷ்ணு சுக்கிரன்

வந்துமே மாபலியை மூன்றடிமண் கேட்டான்
மகிழ்ந்தளித்து மூன்றடிமண் கொடுக்கும்போது
சுந்தரசுக் கிரனறிந்து கெண்டி மூக்கைச்
சுருக்காகப் போயடைத்தான் துருப்பி னாலே
மந்திரமால் சுக்கிரன்றன் கண்ணிற் குத்த
மறைந்தவன்றான் பறந்துவிட்டான் தெத்தம் வாங்கி
அந்தமது வாங்கிவிசுவ ரூபமாகி நின்று
அகிலாண்ட மிரண்டடியி லளந்தான் மாலே. (197)

அளந்துஒ ரடிக்கிடந்தான் கேட்கும்போது
அடியேன்றன் முடியென்று வெலிய மன்னன்
அளந்தவடி யவன்முடிமேல் வைத்துக் கீழே
அழுத்திவிட்டான் பாதாளத் தழுந்திப் போக
பிளந்துதீ பந்தூண்டு மெலிக்குத் தானும்
பேருலக மீய்ந்தவனே கர்த்தா வாகும்
அளந்துதா னங்கொடுத்தார் தமக்குக் கேடு
அளிப்பாரோ சகலாத்மா வாகுந் தானே. (198)

ஆகின்ற யிறைவனுக்கு யெதுவிஷய மாகும்
அகிலபோ கங்களிலாத் மாக்களுக்கு விஷயம்
போகியென்ற அரியயனும் பட்ட பாடு
பொய்யாத சிவனவர்க்கு வருத்தந் தீர்ந்து
சாகாம லவற்குலக மளித்த வாரும்
சனகாதி நால்வருடன் புசுண்டர்முத லறிவார்
ஆகாத யுகந்தோறும் அரியயன்றன் பிலமும்
அரன்செயலும் பார்த்தறிந்தே னய்யா கேளே.()

பாச லட்சணம்.

அப்பனே பாசத்தின் லட்சணத்தைக் கேளு
ஆணவமு மாய்கையது காமியகன் மத்தினோடு
செப்பரிய திரோதையொடு மலமைந் தாகும்
திருநாமம் பாசமென்றே செப்பும் நூல்கள்
ஒப்பில்லா ஆணவந்தா னென்றாய் நின்று
உயிரையெல் லாமயக்கில் மயக்கி நிற்கும்
அப்பனே அருளுயிரைத் தெரியாது மறைத்து
அறியாமை யேவடிவா யாட்டும் பாரே. (200)

மல விபரம்.

பாரில்நல்ல நினைவுகளை மறைத்துப் பொல்லாப்
பாவநினை வாகுமது நினைப்பிக் கும்பார்
பூரிநல்ல சொற்களைத்தான் சொல்லொட் டாமல்
பொல்லாத சொற்களைத்தான் சொல்லி விக்கும்
கோரிநல்ல தொனிகளைத்தான் செய்யொட் டாமல்
கொடுபொல்லாத் துருபவந்தான் செய்விக்கும் பார்
ஊரிலுயிர்க் கூதியமாங் காரி யங்கள்
ஓர்காலத் தினுமலந்தான் செய்யொட் டாதே. ()

செய்யுயிர்க்குக் கேடுவரும் கர்மகா ரியங்கள்
தினமுமிடை விடாமலே செய்துகொண் டேயிருக்கும்
மெய்யுயிரி னில்அறிவை யெந்தக்கா லமுந்தான்
இடைவிடா மற்கெடுத்துக் கொண்டிருக்கு மிருளாய்
கொய்பொல்லா வறிவையெந்தக் காலமிடை விடாது
கொடுத்துக்கொண் டேயிருக்கும் ஆகமவே தத்தைப்
பொய்யாகத் தோற்றுவிக்கும் புரிசடையோ னருளும்
பொய்யாக்கிப் பொய்யுலகை மெய்யாக்கு மலமே.

நல்வினை தீவினை 14-ன் விபரம்.

மலமான கர்மத்தின் வகையைக் கேளு
வளர்ந்தநல் வினைதீ வினையுட னிரண்டாம்
குலமான மனவாக்குக் காயத் தாலுங்
கொடியபசுத் தீவினையாங் கர்மம் நான்காந்
தலமான மனம்புத்தி சித்தமாங் காரம்
தன்னிலிரு வினைநான்காம் ஆகவினை யிரண்டில்
பெலமான யீரேழா மிவையின்றி வினைகள்
பேராகப் பலவினைக ளுண்டாக்குங் காணே.(203)

காணாத நல்வினைக்குப் பசுபுண்ணிய மென்றும்
கடந்தசிவ புண்ணியமென் றிரண்டுபலன் வருகும்
தோணாத தீவினைகள் சிவத்துரோக மாத்மத்
துரோகமென்ற யிருபவமுந் துடர்ந்துவரும் பாரு
பூணாத புண்ணியத்தால் பலயின்பம் வரும்பார்
பொல்லாத பாவத்தால் துன்பபல மாகும்
வீணான வினைகளுக்கே தூல கர்ம
மென்றுரைத்தார் நாமயல்லோ நிர்மலமாம் பாரே.

மலர்ந்திந்த மிருவினைக்கும் பின்பலன தாக
வருகிறதோ ரின்பதுன்பப் பலன்க ளுக்குப்
புலர்ந்தவத சூக்கும கர்மமென் றுரைப்பார்
பூட்டுமிரு வினைகள்கா மியமென்றே நாமம்
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ...
கலந்தயிரு வினைப்பயனுப் புண்ணியமாம் பாவங்
களுக்கும்பேர் சஞ்சிதமென் றுரைத்திடுமோ கமமே.

நல்வினை தீவினை உபமானம்.

இடுபுண்ய பலங்களுக்குப் பலனுவது துன்பம்
யின்பதுன் பங்களுக்குப் பிரூரத்தவமென்று பேரு
படியில்பயி ரிடுவதும்போல் மிருவினைகள் பிறப்பு
பலனதனைக் களஞ்சியத்தில் கட்டிவைப் பதுபோல்
திடபாவ புண்ணியங்கள் கட்டிவைத் திடுதல்
சிறுகவெடுத் துண்பதுபோ லின்ப துன்பம்
கடிலின்ப துன்பங்கள் தெய்வீகத் தாலும்
களர்பஞ்ச பூதங்க ளாலுந்தான் வருமே.(206)

தானுன மறையுயிர்க ளாலேயும் வரும்பார்
தனியாக மூன்றுகும் புண்ணியபா வங்கள்
ஊனுன தானிச்சைப் பட்டுவரு கிறது
உண்டிச்சைப் படாமலே வருகிறது மூண்டு
வேனுன தன்னிச்சைப் படிக்கிவா ராமல்
வேறொன்று வருகிறது உண்டாகு மூன்றும்
கோனுன் தனுகரண புவனபோ கங்கள்
கொடுத்துநிற்குங் காரணத்தின் குணந்தான் முற்றே.
(207)

இரண்டாவது தத்துவ காண்டம் முற்றிற்று.

---

உ
பரமபதி துணை.

# மூன்றாவது ஞான காண்டம்.

ஆதி யகத்திய ரோதிய தத்துவம்
மேதினி கற்றவர் தீதிலாச் சித்தரே.

மாயையி னுற்பவம்.

முற்றுமே தெரிந்துரைத்த யெந்தன் வாக்கு
முன்னுரைத்த பிரணவமு வெழுத்தன்பத் தொன்றும்
பத்துமெழு கோடிமகா மந்திரங்க ளுடனே
பதமெண்பத் தொன்றும்வே தங்கள் நான்கும்
மித்திரமூ லாதாரம் நாலேழு யிருநூற்
றேழாகு மிருபத்தெட் டாகமசாத் திரங்கள்
பத்துகலைக் ஞானங்க ளறுபத்து நாலும்
பதினெண்பு ராணமொடு பகரக் கேளே. (208)

பகர்சத்தி பேதங்கள் சிவபேதத் துடனே
பகர்நாத பேதங்கள் விந்துபே தங்கள்
உகந்தசதா சிவபேத மகேசுபர பேதம்
உருத்திரபே தங்களுட னுண்டின்னங் கேளு
சகலவிஞ் ஞானகலர் பிரளாய கலர்க்கும்
சரிகைகிரிகை யோகம் சாதகமூ வருக்கும்
நிகரில்லாத் தனுகரண புவனபோ கங்கள்
நிவிர்த்தாதி கலைகளஞ்சும் மாயையினுற் பவமே.

உற்பத்தி யனந்தகா ரியம்சுத்த மாயை
உள்ளிருந்து பிறக்குமது யெப்படிப்போ லென்றால்
பொற்பலகைக் கட்டியிலே பலபலவா பரணம்
புறக்கிறது போலவுமோ ரயக்கட்டி தனிலே
கற்பனையாய்ப் பலபலஆ யுதம்பிறப் பதுபோல்
கருமணலில் பலபாண்டம் பிறக்கிறது போலும்
சொற்பலவாம் பலபேத புவனபோ கங்கள்
சுத்தமா மாய்கையிலே தோன்றிடுமென் னுலகே. ()

அசுத்த மாயை.

உலகினி லசுத்தமாயை யுரைக்கக் கேளு
ஒடுங்காத வித்தியா தத்துவமோ ரேழும்
நலமான பிரமனொடு விட்ணுயிந் திரர்கள்
நவக்கிரகம் நானிலத்தில் மற்று மூள்ள
தலமான தனுகரண புவன போகம்
தன்னுடனே பிரகிருதி மாயையோ டிருந்த
இலமான மூவெட்டுத் தத்துவங்க ளுடனே
யின்னமனந் தம்பிறக்கும் சுத்தமா யையிலே.()

பிறப்பதொரு வித்ததிலே பலதோப்புப் பேரிலே
பலபூவுங் காய்கனிகள் பிறக்கிறது போலும்
உறப்பதோர் நெல்லிற்பல நெல்லுண்டா வதுபோல்
ஒருமேகந் தனிற்பிரிவு பலவிதங்க ளுடனே
யறப்பதோர் பலசத்த மிடிகள் மின்னல்
பலபலயிந் திரதனுசு பிறக்கிறது போல
கரைகண்டன் திருவருளால் சுத்தமா யையிலே
காண்பரிய பலபுவன மிருகமுண்டாங் காணே.()

நால்யோனி எழுவகை தோற்றம்.

காணப்பா அண்டசமா முட்டை யாலும்
காண்பரிய சுவேதசமாம் வேர்வை யாலும்
தாணப்பா உற்பீசம் விறையி னாலும்
சராயுசமாந் தோற்பையினால் தேகந் தோணும்
தோணப்பா யெழுவிதமாந் தோற்றங் கேளு
துரிசான நரர்பிறப்பு ஒன்பான் லெச்சம்
பூணப்பா தாபரம்பத் தொன்பது லெச்சம்
புகழ்ந்தபதி னைந்துலெச்சம் ஊர்வனத்தின் பிறப்பே ()

பிறந்தபதி னொருலெட்சம் தேவர் நீர் வாழும்
பிறப்பான உடற்பேதம் பத்துலெட்ச மென்பார்
பிறந்ததொரு பறவைபத்து லெட்சமாகும்
பிறந்துதே நாற்காலின் பிறப்பின் பேதம்
துறந்தயெழு தோற்றத்தின் தொகையைக் கேளு
சொல்வார்க ளெண்பத்து நாலுலட்ச மென்று
கறந்ததொரு தேகத்தி லனந்தவுட லுண்டாம்
கரையில்லை கணக்கில்லை கருத்துடன்பார்த் தறியே.

உட்கருவி 36.

அறிந்துபார் காரணத்தைச் சொல்லக் கேளு
அளப்பரிய பூதமைந்து ஞானேந்திரிய மைந்து
பிரிந்துபார் கர்மேந்திரிய மைந்தி னோடே
பேரான சத்தாதி விஷய மைந்து
விரிந்துபா ரந்தகர ணத்தி னோடே
மேலான ஆத்மதத்வ மாகு மென்பார்
அரிந்தவித்தியா தத்துவமோ ரேழுசிவ தத்துவம்
ஐந்துடனே யாறுறு தத்துவமுள் ளாமே. (215)

(புறக்கருவி அறுபது.)

உள்ளான மண்ணினுட கூறைந்தும் செலக்
கூரைந்து தேயுவின்கூ றைந்தி னோடு
தள்ளாத வாயுவின்கூ றைந்துவான் கூறு
தானைந்து பூதத்தி லிருபத்தி யைந்தும்
விள்ளாத நாடிபத்து வாய்வு பத்து
மேலான வசனாதி ஐந்த தாகும்
வள்ளலே குணமூன்று ஆங்கார மூன்று
வாக்கது நான்குடனே டறுப தாமே. (216)

புவன விபரம்.

அறுபதுதான் புறக்கருவி யென்பார் சித்தர்
ஆகமொத்தந் தொண்ணூற்று ருகு மென்பார்
உருவதியை நான்கென்பா ரிதனுக் குள்ளே
உண்டான கருவிசொல்லத் துகையோ யில்லை
குறியான புவனத்தைச் சொல்லக் கேளு
கூடுபல முளங்கொண்டா லொருவீ டாகும்
செறிவான பலவீடு கூடினதோர் தெருவாம்
தெருக்கள்பல கூடினதோ ரூரென் பாரே. (217)

ஊர்கள்பல கூடினதோர் நாட தாகும்
உறுநாடு பலசேர்ந்தோர் தேச மாகும்
பார்தேசம் பலகூடில் கண்ட மொன்று
பலகண்டங் கூடிலது உலக மாகும்

சீருலகம் பலகூடில் அண்ட மொன்று
சிறந்தஅண்டம் பலகூடில் புவன மொன்றும்
சார்வறிய பெரும்புவன மெண்ணிக்கை சொல்லச்
சதாசிவனு லாகாது யாரறிவார் காணே. (218)

போக விபரம்.

காணப்பா போகத்தைச் சொல்லக் கேளு
காண்பரிய சொர்ணமா மாட கூடம்
பூணப்பா நல்லாடை நல்ல பூமி
புகழான நல்லமனை நல்ல உண்டி
தோணப்பா நற்பெண்க ளிவைகள் முதலாக
தூயபதார்த் தங்களிலே உயிருக்கு விருப்பம்
பேணப்பா புலிகரடி பாம்புதேள் நாயும்
பெரியதுற் கெந்தமுதற் றரித்திரத் தினோடே. ()

திறமான மெய்வருந்தச் செய்யுகிற கருமம்
சேர்ந்தவண்ண மாகாத பொசிப்புத் தூக்கம்
கறமான விசம்நெருப்புப் பாசாணத் தோடே
கண்டதுபின் புள்ளதெல்லாம் வெறுப்பாகு முயிர்க்கு
சொரிவிருப்பு வெறுப்பிரண்டு பதார்த்தத் துக்குச்
சொல்லவொண்ணு தளவில்லை கண்டு பாரு
விரிவான சத்தாதி ஐந்தி னுள்ளே
விருப்போடு வெறுப்பெல்லா மொடுங்கும் பாரே. ()

அடங்காத சத்தாதி ஐந்தினிலொவ் வொன்றில்
அளவிறந்த தாகவரு மறிந்து பாரு
மடங்குகின்ற இன்பதுன்ப மிரண்டு மேது
வாகவே வருபோகம் வருவ தெல்லாம்
அடங்காது யின்பதுன்ப மிரண்டேற்றுக் கொண்டு
அனுபவித்தா லல்லாமல் ஆசை மூன்றால்
அடங்குவதோ சொன்னதற் கில்லை யென்றே
ஆதிமறை யாகமந்தா னறைந்த தன்றே. (221)

அன்றுபுத்தி யுத்திபூரு வத்தி லப்யா
ஆகாகா சரிதையினிற் பாயுங்கிரி கையுமே
சென்றிட்ட பரயோக மெஞ்ஞான முடனே
சிவபுண்ணி யம்வரவே செய்து பின்பு

நன்றிறைவன் ஞானசா ரியருக வந்து
நல்லசிவ புண்யபல மூண்மை ஞானம்
அன்றுகொடுப் பானந்த ஞானமே தென்னில்
ஆகமங்க ளுரைத்ததச காரியமென் றறியே. ()

அறிந்துதத்துவ சரிதைமுதல் சிவயோகம் வரைக்கும்
ஆ கவொன்பா னுயிர்கண்டு களிப்ப னவாம்
அறிந்துசிவ யோகமென்று மிடைவிடா தென்றும்
ஆவிகண்டு கொண்டேதா னிருப்பதொருக் காலும்
பிரிந்துதள்ள மாட்டாது யிதற்குமே லுயிர்க்கும்
பேரான ஊதியந்தா னென்றுமில்லை யிதன்மேற்
பிரிந்துயிதின் மேல்விரிந்த நூல்க ளில்லை
பிரிதுரைப்பேன் தத்துவத்தின் பெருமை கேளே.

தத்துவத்தின் பெருமை.

கேளப்பா ஐவருட னெழுவகைத்தோற் றத்தின்
கேடில்லா உயிர்களே வானமுடன் மலையாம்
வாளப்பா பதம்பூமி மந்திரங்க ளுடனே
மகத்தான சதாவண்ட முடனுமகா வண்டம்
மேலப்பா பார்சகல உருவ மெல்லாம்
மேலான தத்துவந்தா னென்பார் சித்தர்
தாளப்பா வெல்வதுவுந் தத்துவமே யல்லால்
தாரணியில் வேறுருவ மில்லை தானே. (224)

உருப அருபம்,

உருவமென அறிதல்சொரூ பந்தனைக் கண்டால்
உனதுதெரி சனமிதுபொய் யென்றறிதல் சுத்தி
கருவிகளி லவனதிலே யெனவைந்தி லொருவன்
கலந்ததல முருவதனைக் காணல்தெரி சனமாம்
மருவியதோர் செயலையன்றிச் சுத்தி யாலும்
மன்னாரு னென்பதுவு மன்பாங் கண்டால்
திருயோக மாகுமா னேடொன்ற லொன்றிச்
சிவயோக மாமிதுவாஞ் சோதியா னியதே. (225)

ஐந்து முகம்.

ஆதியரன் முகமைந்தா மீசான்யம் புருடம்
அகோரமது வாமமுடன் சத்தியோ சாதம்
வீதியிலீ சானகலை யைந்த தாகும்
விளங்கியதற் புருடகலை யொருநான் காகும்
சோதியா மகோரகலை யெட்ட தாகும்
சுத்தமாய்ப் பதிமூன் றா வாமகலை யாகும்
போதுசத்தியோ சாதகலை யெட்டெண் பார்கள்
மூப்பத்தெண் கலையெனவே மொழிந்திடுமா கமமே.(226)

ஆகமமு மண்ணீரே டேபிர் மாண்டம்
அடங்குமது நிவர்த்தியொடு பிறப்பு மாச்சு
சுகமாக மூன்றடங்கும் பிரதிட்டை யோடு
சோகமாய்க் கலாதிகளேழ் இட்சை மூன்று
தேகவாயு விலடங்கும் சாந்தியதாஞ் சத்தி
சிவம்விசுப்பி லுருவதுவே சாந்தியா தீதம்
போகாத பூதமைந்திற் கருவிக ளாலும்
பொருந்திநிற்கு மெனஉரைத்தார் அருந்தவமே லோரே.

மேலான பரைசாந்தி யதீதகலை தன்னால்
மேற்சதா சிவன்தொழில் நடத்துவனு மாதி
நாலான சாந்திகலை யாலீசன் தொழிலும்
நடத்துமிச்சை வித்தைகலை யாமுருத்திரன் தொழிலும்
சூலான ஞானசத்திகலை யாயிரத்தெட் டைமால்
தொழில்நடத்தும் கிரியாசத்தி கலைகள் தன்னால்
பாலான தாமரையோன் நடத்துந் தொழில்கள்
பரசிவனு ரானந்தம் பஞ்சசத்தி யாலே. (228)

சத்தியொடு சிவகிரிகை நிவர்த்திகலை ரெண்டும்
தனியான மந்திரத்தால் புறமொருநூற் றெட்டாம்
உற்றபதம் நாலெழுந்து ஒன்றுகும் பிரமம்
உளவதுமுன் னிலையாகப் பல்லுயிர்க்கு மினிதாய்
உற்றபுவி யிடமாக மருவுமிரு நாசி
உபஸ்தமதால் வருமயனை யின்னிலையே யருந்தி
அற்றமுன் போலென்ற யிருவினையை நிவர்த்தியில்
அடைத்திடுமெய்ப் பரனென்றே யாகமத் தினுரையே.()

உரைஞான சத்திபிர திட்டைகலை யினிலே
ஒளியிரண்டு மந்திரத்தா லிருபத்து மூன்று
யிரைதத்து வத்தாலே மூவெட்டு மெழுத்தார்
பதமாரே யெழுமூன்றும் பிரமன்பத் தாறல்
அரிதன்ஞல் முன்னிலைதான் நீரினிட மாக
அனைத்துயிர்க்கும் விளங்குயா சிங்வை யாலும்
தெரிவினைக ளணுகாத வழியடைந்த வினைமுற்
செரிபயன்போல் வைத்திடுமா கமத்தியெனு நூலே.()

எனுமிச்சை வித்தைகலை யினில் ருத்திர
இறைபால்மந் திரமிரண்டால் பதமெழுமூன் றதனுல்
வின்னேழு தத்துவத்தால் பாமேயொன் பதனுல்
வினைவித்தால் யிந்திரியம் நேத்திரங்கை யதனுல்
வினையடர்ந்த பயனையெல்லாம் ருத்திரன்பின் னென்ற
வினையனைத்தும் முன்போல வித்தையில்வைத் திடுமால்
நினையாதி சாந்திகலையின் மயேசுரன்முன் னிலையால்
நிலையாமந் திரமிரண்டாய் பதம்பதினென் ருமே ()

ஒன்ருய்த்தத் துவமூன்ரு யன்னமது மூன்ரு
யுகமதுவும் பதினெட்டா யுயிர்கட் கன்பாய்
யின்றுகா லிடந்தொக்காம் பாதந் தன்ருல்
யிருவினையின் பயனிருத்தி முன்போல் துண்டு
துன்றுவினைப் பயனையறுத் தவன்சாந் தியினிற்
சொற்பரைய தீதகலை யால்மந்திர மூன்ருல்
பன்னுபத மொன்ருல்தத் துவத்தால் புவனம்
பதினைந்தார் சதாசிவன்முன் னிலையாலும் பரிந்தே. (232)

பரிவானில் செவிவாக்கால் சேருங் கன்மம்
பரிந்தருந்தி முன்போன்றவ் விதி படைப்பான்
தெரிகலையில் பரிசமென வடிவெய்தி வரலாம்
சேர்ந்தமுடி கலைகளைந்தாம் சாதியது நான்கும்
உரியவர்ண வித்தைமுதல் மூன்றுமே புரமாய்
ஒளிபிறத்திட் டந்தெரிந்து முந்திபத நிவர்த்தி
விரிதொக்கு வக்கரங்கள் புவனசா கரங்கள்
மேலான வித்தாம் போகங்க ளாமே. (233)

ஆமப்பா சுக்கிலமோ டத்தி நிணா மூளை
ஆறுரு தத்துவமா யணுகு மப்பா
ஓமப்பா சந்திரன்ரு ளுக்கைக யாக
உலகவுயி ரனைத்தினையு மறிவன் கண்டாய்
தாமப்பா சத்திவிழி திரோபவத் துக்குத்
தரும்பிரிய யிச்சாஞானக் கிரிகை யாக
நாமப்பா உள்ளொளியா யாவுங் காண்பான்
நன்மாயை பலவுயிர்க்குங் கண்ணென் பாரே. ()

கண்ணான ஓங்கார பீட மாகும்
கலந்தநடுக் கண்டமதா லவ்வென் பார்கள்
மின்னான மேற்பீட மூகார மாகும்
மீதிலதற் குள்வட்ட மகார மாகும்
நன்ரான வட்டமே விந்து நாதம்
நாதாந்தச் சோதிலிங்க மாகு மென்பார்
மன்ரான காரண நிலை லிங்கந்தா னென்பார்
மகத்தான பரமநிலை லிங்கந் தானே. (235)

லிங்கத்துக் கடிப்பிடியாங் கிரியா சத்தி
லீலைகளோ மாஞான சத்தி யாகும்
அங்கத்தின் மேற்பீட மிச்சா சத்தி
அதனிலே உள்வட்ட மாதி சத்தி
சங்கத்தின் லிங்கநிலை பறையாம் சத்தி
தனிப்பீட மேற்சிவமாம் சாம்ப லிங்கம்
யெங்குமெங்கும் பிரமமொன்ருய்ப் பூசை செய்யும்
யிறைவருக்கு மிவ்வுருவந் தெரியும் பாரே. (236)

தெரிநாதத் தாலுள்ளத்தி லனுக்கிரக மாகும்
செய்வன் விந்து வாலீசன் சிந்தைதனில் மறைப்பன்
அரிமனத்தி லுருத்திரன் மகாரத்தா லழிப்பன்
அரியவன் புத்திநின்று உகாரத்தா லழிப்பன்
பரிமலரோன் நகாரத்தா லாங்காரம் பொருந்திப்
படைத்திடுவ னோங்காரப் படிவ மாதல்
விரிவுளநற் புவனமண்டம் பலவுயிர்க ளெல்லாம்
விளங்கிநின்ற லிங்கமது ஐந்தொழிலுஞ் செயுமே. (

செய்யுகின்ற நாதத்திற் சிகாரந் தோன்றும்
சிகாரம்விந் திற்சேர்ந்து யகாரந் தோன்றும்
மய்யுகின்ற யகாரத்தில் மகாரந் தோன்றும்
மகாரமென்ற உகாரத்தில் அகாரந் தோன்றும்
துய்யதொரு அகாரமாம் அவ்வில்நின்று மகாரம்
தோன்றுமிவ் வைந்தெழுத்தில் மாயைமல மிரண்டும்
செய்யருளு மிறையாகி அஞ்செழுத்துஞ் சுழியிற்
செனியாமற் செவிப்பதுவே முத்திநெறி திறமே. ()

திறமான அஞ்செழுத்தே அரியயனு மரனும்
சிவனீச னாகிநிற்கு மும்முதலு மாகும்
மரியினிலே திரோதைசத்தி சிவமுந்தற் பதமாம்
மயக்குமுயிர் தொம்பதம் பசுவாகு மென்பார்
பிரியுமஞ் ஞானவிருள் மலவித் தாகும் [லும்
பெத்தமுத்தி யிரண்டினுக்கும் அஞ்செழுத் தைந்தொழி
நெரியான பொற்பொதுவி லெந்தைபிரா னடமும்
நேயமா யீதுண்மை நினைக்கரிதென் றுணரே. ()

உணர்ந்தஅந்த யகாரபதி நாத மைந்தும்
ஒளியாத யாகமந்த மகார மாகும்
புணர்ந்தசிகா ரமதுவே துடிய தாகும்
புகழாக வீசியகை வகார மாகும்
பணர்ந்தயகா ரம்நகாரம் புருவமைய மாக
வாழுந்தா மாகமுய லகனின் மேலே
புணர்ந்த மகார நிலை யனந்தா னந்தம்
பொற்பொதுவில் நிற்தமிடும் பொருள்தான் பாரே

பாருணரு பதமாசுவ காரியுல குயிர்க்குப்
பகரின்ப முறுவித்த சிவனுடைய சிருட்டி
தோருணர்ந்து அபயங்காத்தல் வினையிரண் டுக்குந்
தோலையொப்பாந் துத்தியாஞ் சோதிமுகத் தாலே
சாரிசுழல் கரணமறுத்தே பாவமழிப் பதுவே
சம்மாரம தாம்வெளி யுருவால்த் திரோதே
சார்வகற்றுத லெடுத்தபதத் தாற்கே வலமுஞ்
சகலத்தி லெடுத்தருளால் முத்தியளிப் பதுவே. ()

அழிப்பதுவே யனுக்கிரக மிவைபொதுவில் நடனம்
ஆடுவதா மரன்சிவா னந்தநடஞ் சிகாரம்
கழிப்பதுவம் பலம்பரையே வகாரமதா மாவி
காசிவ போகமருந்தல் யகாரம் தானம்
விழிப்பதுஞா துருஞேயம் தெரிந்துபகுத் தறியும்
மெய்யறிவை யழித்தொன்றாக் குந்திரோதை யுலக
ஒழித்துமறந் திடுங்கர்ம மலயுருவை யழித்து
ஓதறிய வின்பம்விளைக்கும் அகாரம் வேறே.(242)

வேறான அகாரத்தில் மகாரமுதிப் பதுவாம்
வேற்றுமையா லுகாரத்தில் நகாரமுதிப் பதுவாம்
கூரான மகாரத்தில் யகாரமது வுளவாம்
கூடரிய விந்துவிலே வகாரமது வுளவாம்
போரான நாதத்திற் சிகார முண்டாம்
பிரணவத்தி லைந்தெழுத்தும் பெருகித்தோன் றும்
ஊரான நாதமொன்றே விந்துவதா யவ்வாய்
உகாரம தாகியுதித் தொடுங்குந் தானே. (243)

தானென்ற பிரணவத்தில் தத்து வங்கள்
தான்தோன்றி யொடுங்குமெனத் தானே சொல்லும்
மூனென்ற பிரணவமே சித்த ருக்கு
ஒடுங்காத மவுனவித்தை யென்பார் சித்தர்
கோனென்ற கடிகைமுதல் வாயு வுள்ள
கூறரிய தத்துவத்தின் குறிப்பு ரூபம்
வேனென்ற தத்துவநூ லாயி ரத்தில்
விரித்துரைத்தேன் துகையதினில் விளம்பி நேரே.()

வேதாந்தத் தத்துவம்.

நேராக வேதாந்த தத்துவத்தைக் கேளு
நிலையான தத்துவந்தான் சிவன்றன் னாலும்
கூரான தூலசூட்ச காரணதேக மூன்று
குறிஞான யோககிரிகை சரிதை யோடு
பார்பத நாலுமீசுர சிவப் பிர்மம்
படர்மூன் றுந் தொந்தத்தில் முப்பதமு மாகும்
சேர்வகை பத்துடனே யபிமான மாகும்
சிவேசுரர்க்கு உபாதிக ளீரே ழாமே. (245)

ஆமப்பா முப்பதத்தின் சுத்தியிலே யெட்டு
ஆதியாம் லட்சணைகள் மூன்றி னோடு
ஓமப்பா யிதுவல்லோ உபநிடத்தின் சுத்தி
உணர்ந்தவனே வேதாந்த முணர்ந்த சித்தன்
தாமப்பா யிதுவறிந்தால் பிரமநிட்டை சுத்தி
தனிஞான முத்திக்கு உகந்த தப்பா
காமப்பா யிதின்விரிவு காவி யத்தில்
கைமுறையாய்ச் சொல்லிவைத்தேன் கண்டு பாரே (246)

குரு உபதேசம்.

கண்டந்த வேதாந்த சித்தாந்தத் தோடு
காரணமாஞ் சமரசமுங் கண்டு தேறி
கொண்டறிந்த அறிவல்லோ வாக்கியந்தா னென்பார்
குறியான லட்சயத்தின் குறிப்பைக் கேளு
விண்டந்த மவுனவித்தை யென்பார் சித்தர்
வேதாந்த சித்தாந்த நிலையென் பார்கள்
பண்டுஅரன் குருவுருவாய் யால்நிழலி னின்று
பகர்ந்தானென் னுடனுல்வர் பணியத் தானே. ()

மவுனம்.

பணியான மவுனத்தைப் பாங்காய்க் கேளு
பாங்கான அவ்வுமுவ்வு மவ்வுங் கூடி
கனியாத விந்துநாதத் தொனியி னோடு
கைமுறையாய்ப் பிரணவமே யெழுத்தஞ் சுந்தான்
மணியான மூலத்தி லறிந்து மூட்டு
மகத்தான சுழிமுனையாம் வழியிற் கூடி
அணியான மவுனவா னந்தம் நிற்கில்
அடங்காத தசநாத மெழும்பும் பாரே. (248)

பாரந்த நாதத்தில் மவுனங் கூட்டப்
பளிச்சென்று கோடிரவி யொளிதான் தோன்றும்
நேரந்த மவுனவே தாந்த பிர்மம்
நிச்சயமாய்ச் சிவமென்று சித்தாந் தங்கள்
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ...
கூரந்தச் சமரசமே யானந்த மென்று
கூறுமது மவுனத்தின் குறியைக் கேளே (249)

குறியான மவுனத்திற் கூடும் போது
குறிப்பான மேதகலை முன்னே தோன்றும்
அரியாதி யரன்பீசம் விசகலையின் விந்து
அதன்பின்னே தோன்றுமது ஆத்மவடி வென்பார்
பிரியாத தொம்பதமாம் யிறைவர்தூல வடிவாம்
பேசாத சிவதுரிய மிதுவா மென்பார்
நெறியான விந்துவிலே மவுன மூட்டில்
னிரோதையர்த்த சந்திரனுந் தோற்றும் பாரே. ()

தோன்றுமந்த நாதாந்த முடனே நாலும்
சொல்லுவா ரிதைச்சூக்ம தேகந்தா னென்று
ஊன்றுபர துரியந்தற் பதமருளா மென்று
உரைநாதங் கடந்தந்த மவுன மூட்ட
ஏனென்ற சத்தியாமளை சாமளையுன் மனையும்
யிதன்பின்னென் றுமிறைவன் காரணதேகமதாம்
ஊன்றுசிவ துரியபத மிவைதா னென்பார்
உன்மனனந் தம்மிறைவ னுருவென் பாரே. ()

வாத சித்தி, காய சித்தி.

பாரப்பா சித்தரெல்லாங் காய சித்தி
பாடினார் முறையாகப் பண்ணியே தான்
நேரப்பா வாதவித்தை பண்ணச் சொல்லி
நிலைத்தபின்பு காயசித்தி பண்ண வேணும்
வாரப்பா வாதம்விட்டுக் காயசித்தி செய்தால்
மத்தியிலே யவதிவரும் பொருளே போகும்
சேரப்பா வாதம்விட்டுக் காயசித்தி தானும்
செய்வதுதா னரிதரிது செகத்திற் றனே. (252)

வாத முறை.

செகத்திலே வாதநூல் பார்த்துத் தேறிச்
சித்திசெய்ய வேணுமென்றால் செப்பக் கேளு
யிகத்திலே நூல்தோறு முறையோ சங்கம்
யெதைப் பார்ப்போ மெதைவிடுவோ மென்றே ஏங்கி
பவத்திலே விழுந்துழன்று நிலையில் லாமல்
பண்பான திரோதாயி வலையிற் சிக்கி
யுகத்திலே மாழாமல் பலதுறையு மன்றி
ஒருமொழியாய் வாதமுறை யுரைக்கக் கேளே. (253)

பூனீருப்பு துருசு சுத்தி.

கேளப்பா பூனீரு சேர்தான் ஒன்று
கெடியான கல்லுப்பு அரைக்காற் சேரு
வாளப்பா வீரம்வெள்ளை யரைக்காற் சேரு
மாட்டியே பொடிபண்ணி வைத்துக் கொண்டு
தாளப்பா அமுரியது மூன்று சேரில்
தனிச்சுண்ணம் நீற்றியே யிருத்துக் கொண்டு
கோளப்பா பூனீரைக் கலக்கிக் கொண்டு
குறியாகக் கயறினால் கடைந்தி டாயே. (254)

கடைந்தநுரை பீங்கானில் வாங்கிக் காயக்
கடியவுப்பா மண்டநீ ரால வைத்து
குடந்தவில்லை யாய்ப்பிடித்துப் புடத்தைப் போடு
குறிப்பான கடுஞ்சுண்ணம் வழலைச் சுண்ணம்
மூடைந்தயிந்தச் சுண்ணமுடன் மித்துருவைத் தானும்
ஒக்கவே பதிநாலு உமிழ்நீரா லரைத்து
விடைந்தகண்டர் பலமொன்று சுத்தி கேளு
வெள்வங்க நீர்வீர மேலே பூசே. (255)

பூசியே முன்வழலை மேலே பூசிப்
புகழாக உலர்த்தியே சீலை சுத்தி
மாசற்ற வங்கத்திற் ரேய்த் தெரிக்க
வளமான சுத்தியாம் வாங்கிக் கொண்டு
ஓசைபதி னைந்துமித்திரம் நாதவிந்தா லாட்டி
ஒடுங்காத கண்டர்க்கப்பி ரவியில் வைக்கக்
காசியே போயலைந்து திரிய வேண்டாம்
கடுரவியில் நீராக வீழ்கும் பாரே. (256)

வீழ்ந்தநீர் பரணிதனி லடைத்துக் கொண்டு
வீரமொன்று சூதமொன்று யேமமொன்று
சூழ்ந்தகுரு வொன்றிந்த நாலுங் கூட்டிச்
சுத்தலகு புடந்தனிலே குருவாய் நிற்கும்
தாழ்ந்தகுரு வல்லவிது சூதத் துக்குத்
தாக்குமுன்னே மணியாகும் புடத்தைத் தீர்க்க
ஆழ்ந்தமணி பீசத்திற் சரியாய்ச் சேர்த்து
அடர்கண்டர் வீரமுட னரைத்துச் சேரே. (257)

அரைத்ததின்மேல் வழலையுட சுண்ணம் பூசி
அண்டோட்டுப் பொடியில்வைத்து நாற்சாம மெரிக்க
வரைத்தகுரு வாய்நிற்கும் சூதத்தி லூட்ட
மணியாகும் புடந்தீர்ந்து வாங்கிக் கொண்டு
கரைந்தநா கந்தனிலே துருசு வீரம்
கட்டியே புடம்போட்டுப் பரிசவ் வாது
நிரைத்தகா ரத்துடனே பூசி வாட்ட
திட்சயமா யுருக்கவது மணியு மாமே. (258)

நாக ரசம்.

மணியாக நாகரச முருக்கி வாங்கி
மைந்தனே கெந்தகத்தை யரைத்துப் பூசி
அணியான பதினெட்டுப் புடமுந் தீர்ந்தால்
அருணனைப்போல் நிறமாகும் லோகத் தீய்ந்தால்
தனியான மாத்தெட்டுத் தப்பா தப்பா
தப்பாத யீயத்துக் கசையா தப்பா
இனியாநா லாயிரத்தி நானூற்றி நாற்பத்தெட்டுந்
தீர்ந்துவிடுஞ் சிறப்பாகப் பாலிற் கொள்ளே.()

கொள்ளப்பா தேகமது அருணன் போலக்
குழந்தைமுகம் போல்வதனஞ் சிவந்து மின்னும்
விள்ளப்பா நாடியெல்லா முருக்கு மேறும்
விரைந்துதிரை சடமிறுகி நரையுதிர்ந்து மூளைக்கும்
தள்ளப்பா கண்ணிரண்டுஞ் சிவந்து யேறும்
தந்தமெல்லாம் வச்சிரப்போ லிறுகிப் போகும்
கள்ளப்பா மதியமூர்த தாரை யோடும்
காமப்பால் வெகுவிர்த்தி யாகும் பாரே. (260)

ஆனயிந்த முறையல்லோ ஆதி வித்தை
அசுரகுல காலனன்று அருளும் வித்தை
மோனமெழுஞ் சகலசாத் திரங்கள் தோறும்
முதிர்ந்தவிட மாய்ரசத்தை செபிக்கச் சொல்லும்
தானரசக் குருசுண்ணம் மெழுகு செம்பு
சகலரசஞ் சத்துருக்கிச் செயசூத மிட்டால்
கானகமாம் வங்கத்துக் கோடிப் போகும்
கண்டாலும் நாலுக்குக் கடைக்கே றுதே.(261)

யேருது உறைக்கவுந்தா னூறிப் போகும்
இரும்புமுதல் சகலதுரை கட்டுக் கெல்லாம்
ஊருது செயசூதம் போட்டா யானல்
ஒருதொழிலும் பொய்யாது சகல வேதை
மாருது உப்புவங்க மடிக்க மாட்டா
மகத்தான சூதமது செயமாய் வாய்த்தால்
சீருது திரிவங்கங் கட்டிப் போகும்
செணத்திலே செம்பிலுள்ள ஊறல் போமே. ()

போமப்பா சூதமல்லோ ஆதி யாதி
போக்கறியான் வாதியல்ல மாடு மாடு
ஆமப்பா விந்துசெயம் யோகத்துக் காதி
அறியாதான் யோகியல்ல அலைச்சல் நாயாம்
ஓமப்பா மனேலயமே ஞானிக் காதி
ஒடுங்கவகை யறியாத லுத்த மாடு
தாமப்பா அறிந்தவர்க்குப் பொருமை யாதி
தனிக்கோபி யானுக்காற் சண்டி நாயே. (263)

நாய்போலே யலையாதே யெந்தமுறை யாலும்
நாதாக்கள் முறையாலும் சூதத்தைக் கட்டு
பேய்போலே சூதமுந்திக் கட்டா விட்டால்
பின்பெடுத்த நூல்முறைகள் பொய்யே யாகும்
சேய்போலே நாதாக்கள் பின்னே சென்று
சேர்ந்தபின்பு தத்துவநூல் முறையைக் கேட்டு
தாய்போலே பார்த்தவற்குச் சூதங் கட்டும்.
சத்தியந்தா னிந்தமுறை தப்பா வாறே. (264)

வாருன யிந்தமுறை முன்னே பண்ணி
மகத்தான காயசித்தி பின்னே செய்து
வேருன திருடருக்கென் முறை சொல் லாதே
வேண்டியதெல் லாந்தருவே னென்பார் மாந்தர்
தேருத மூடருக்கு யிந்த நூலின்
செய்திவைத்தான் சொல்லாதே திறமாய்ப் பார்த்து
வாருத கண்ணீரால் ஞானி பார்த்து
வணங்கினற்கு யிந்தநூ லளித்தி டாயே. (265)

அளித்திட்டுச் செயரசமே சிவ னென்று
அறைந்திட்டுப் பலமுறையு மடுக்காய்க் காட்டு
ஒளித்திட்டுக் காயசித்தி பண்ணச் சொல்லி
உறைத்தபின்பு யோகசித்தி செய்யச் சொல்லு
களித்திட்டுத் தத்துவமும் அவத்தை யெல்லாம்
கண்டகண்ணிற் சடங்களுக்கு வேருய்க் கண்டு
ஒளித்திட்டு வுன்னுள்ளே நின்றதெல்லாங் காட்டி
ஒளியாகி நின்றதது உபநிடதத்தால் காட்டே. (266)

காட்டியந்த யிருவகையும் ஐக்கிய மொன்ருய்க்
கரையத்த அனந்தவா னந்த மோன
மூட்டியமெஞ் ஞானத்தில் முடிவுங் காட்டி
மூதண்டக் குளிகைசித்தி முறையாய்க் காட்டு
நீட்டியவே தாகமத்தின் நிலையுங் காட்டி
நினைக்கரிய வேதாந்த நிலையுங் காட்டி
ஆட்டியசித் தாந்தமெல்லா மறியக் காட்டி
அருமைபெற்ற தத்துவநூல் அழகாய்க் காட்டே. (267)

நூலெல்லாந் தத்துவநூல் போலே நூலோ
நுட்பமெல்லாஞ் சித்தருட நூலி லுண்டோ
காலெல்லாஞ் சித்தரிலே அகத்தியநூல் கொப்புக்
கடல்விழுங்கக் கண்டதுண்டோ வென்பார் போலப்
பாலெல்லாம் பார்த்தபின் இனியமுர்தத் தொப்போ
பருவத்தை அளப்பவற்கு தெய்வ மொப்போ
நூலெல்லா முணர்ந்தசிவ சித்தருக்குத் தெரியும்
நுட்பமெல்லா மின்னூற்குள் தெரியுந் தானே. ()

தானென்ற தத்துவநூல் விட்டோன் கெட்டான்
தன்னிலையை யறியாத ஞானி கெட்டான்
ஊனென்ற சமாதிவிட்ட யோகி கெட்டான்
ஓடுகிற குளிகைவிட்ட சித்தன் கெட்டான்
வானென்ற யேழுசட்டை வாங்கிரசங் கட்டா
வாதிகெட்டான் வழலைவிட்டோன் மதியுங் கெட்டான்
கோனென்ற காயசித்தி செய்தோன் பெண்ணைக்
கூடியதா லவன்கெட்டான் குறியைப் பாரே. ()

குறியான மலதேகம் பெண்ணே யென்று
கூடாமற் பரிசத்தால் சிவத்திற் கூடு
அறிவான வேதாந்த சத்த மென்று
அறியாத உலகத்துச் சத்தமெல்லாம் விட்டு
நெறியான சிலம்பொலியை நினைவாய்க் கேளு
நிட்சயமாய்ச் சட்டரச மெல்லாம் விட்டு
மறியான மதியமூர்த ரசத்தி லாசை
வைத்துநன்று யிடைவிடா மகிழ்ந்து வுண்ணே.

உண்ணப்பா பலபுவனத் துருவ மெல்லாம்
ஒடுங்காத பிறப்பிறப்பு ஒன்றும் நில்லா
எண்ணப்பா யிவ்வுருவத் தாசை மாற்றி
யெங்குநிறைந் தென்றைக்கு மளிவில லாத
கண்ணப்பா சகலதுக்க மானந் தங்கள்
கரைகாணாப் பேரொளியாம் ரூபத் தைப்பார்
சண்ணப்பா பலகெந்தத் தாசை விட்டுச்
சச்சுதா னந்தவொளி வாசியினில் நில்லே. (271)

நில்லப்பா தத்துவமல மவத்தை விட்டு
நீங்கிநின்ற உயிர்நீயென் றறிந்து கொண்டு
நல்லப்பா தன்னையறி யாத தாலே
நலமான யிரண்டுவினை தனக்கீ டாக
வல்லப்பா மாயையெல்லா மாலுக் கீய்ந்து
மருத்துடைக்கு மறைப்பித்து வைத்துப் பின்னும்
சொல்லப்பா யெவ்வுயிர்க்கும் பஞ்சகிருத் தியம்
செகமெங்குஞ் செய்ததொரு சிவத்தைக் கண்டே.

கண்டஅவாய் நிற்குமப்போ நால்கரண வலையார்
கடிந்திழுப்பார் கள்வரஞ்சு பேரும் பாரு
விண்டவ ரிழுக்கவே மெஞ்ஞான மாத்மா
வினையேறி யேபிறப்பில் வீழு வார்கள்
கொண்டதொரு வேதாக மங்கள் பலநூலே
கூறுவதி லஞ்சையுமே செயிக்கச் சொல்லும்
பண்டவினை தீர்க்கவென்று லிந்திரிய மஞ்சில்
பாயாமல் மனஞ்சிவத்தி லடங்கி டாயே. (273)

அடங்கிப்பார் சத்தத்தில் மனந்தா னோடி
ஆடிநிற்குஞ் சிலம்பொலியைக் கேளு கேளு
ஒடுங்கியே பெண்முதலாய்ப் பூசணத்திற் பரிசம்
உற்றெலும்பிற் மனமோடி மரித்துக் கொண்டு
துடங்குசிவ னுருவிருந்த உருவ மெல்லாம்
துயருவா யொன்றிரண்டு மன்றி நில்லு
கடங்கள்பல புவனமுருக் கண்ட ஆசை
கண்வழியே மனஞ்செல்லிற் கருவாய்ச் சேளே.()

கேளப்பா யெவ்வுருவும் பொய்யென் றெண்ணி
கிட்டிபொன்றைப் பார்ாம லிறையுருவைப் பாரு
நாளப்பா சட்டரசம் நினைத்துக் கொண்டு
ரசத்தின்வழி மனமோடி வந்தரசத் தாலே
கோளப்பா சாப்பிட்டால் மனமாய்ப் போகும்
கொள்ளைகொண்டாய் மதியமூர்த முண்டா யானல்
சாளப்பா ஞானமுண்டாந் தேகசித்தி யாகும்
சாந்தத்தில் மனம்வைத்துச் சமத்தாய்க் கொள்ளே.

கொள்ளப்பா பலகெந்தந் தாசை யாகி
கூடியங்கே மனதோடிக் கெந்தத் தாலே
நல்லப்பா வாக்ராண மாவதின்றி வேறு
நல்லபிர யோசனந்தா னொன்று மில்லை
துள்ளப்பா கெந்தத்தில் மனமோ டாமல்
சுருக்காகச் சிவகெந்தத் துள்ளே கூடு
விள்ளப்பா யிந்திரிய மிவ்வழியல் லாமல்
வேறொன்று லடங்காது விரைந்து பாரே.(276)

விரைந்தவை ராக்கியத்தா லுபாதி யாலும்
மேலான வாயுவயத் தாலாலு மேலாம்
வரைந்தசட மாமிதற்கு வன்னியயென் றறியும்
அஞ்ஞானத் தாலொடுங்கி மனம்பற் றாமல்
புரைந்தனந் தானந்த நடம்பொதுவி லாடும்
பூங்கழலே மனம்வைத்துப் பொதுவாய் நில்லு
கரைந்தபல தத்துவமு மவத்தையெல்லாம் நீங்கி
கண்டுகண்ணிற் காட்டுமொழி யாகிநிற்கக் கருதே. (277)

கருதிநிற்கும் பெண்ணாசை கடைய தாகும்
கடிதான தாரனைஆணவத்தி னாசை யாகும்
சுருதியினாற் சந்தேக மெல்லா நீங்கும்
சுத்தசிவ சித்தருக்குக் காயசித்தி சொல்வேன்
பரையெழுத்து மூவஞ்சு குருவைக் கேளு
பகர்ந்தாக்கால் கோடியுரு செபித்த பின்பு
நிரவிப்பா ரச்சரத்தால் அகார மூலத்திற்
நீட்சயமாய் வங்கியந்தப் பரையி லோங்கே. ()

ஓங்கிநிற்க ரேசித்துப் பூரித்துக் கும்பி
நோக்கிவிடு சேத்துமமு மற்றுப் போகும்
தாங்கிநின்ற சுளிமுனையுந் திறந்துமதி யமூர்தம்
தாரையது ஓடுமடா சமத்தாய்க் கொள்ள
பாங்கான தேகசித்தி யாகு மாகும்
பளிச்சென்று கோடிமதி பாங்காய்த் தோன்றும்
தேங்கியந்தப் பேரொளியைக் கண்டால் சித்தி
சித்தனவன் தெரியாட்டால் சித்தியில்லான் கேளே.(279)

கேளப்பா காயசித்தி யோகமிது வாகும்
கெட்டியனு மாதியோக சித்தியிது வென்பார்
வாளப்பா தேவிபிர காச யோகம்
மகத்தான குண்டலியின் மூல யோகம்
வேளப்பா விந்தாகு மிந்த யோகம்
விட்டவர்க்குக் காயசித்தி விழலாய்ப் போகும்
தாளப்பா துறந்துவிட்டேன் சித்த ரெல்லாம்
தாமொழித்தார் சம்பிரதாயம் நூலிற் சாற்றினேனே. ()

சாற்றியிந்த யோகமது சித்தி யாகச்
சமத்தாக நூற்றெட்டுக் கற்பங் கொள்ளு
யேற்றியிந்தக் கற்பம்விட்டு யோகம் பார்த்தால்
யெழும்பாது பேரொளியை மனம் பாராது
மாற்றியிந்த மயக்கமொடு தியக்கஞ் சோம்பல்
மடங்காத நித்திரையு மடங்கு மப்பா
பார்த்திந்தக் கற்பமுண்டால் நோயவத்தை மாழும்
பார்ப்பதற்கு யோகத்தால் காயசித்தி யாமே. ()

சித்தியிந்த யோகந்தா னுண்டு வொன்று
செய்துகற்ப முண்டவற்குத் திறக்குஞ் சோதி
பத்தியா மிரண்டாண்டில் நினைத்தநரர் தேவர்
பாதத்தில் வந்துநின்று பணிவார் பாரு
சுத்திமூன் றாண்டினிலே சகல வேதம்
சொல்லாமற் சொல்லவரும் வாசா சித்தி
சத்தியமாய் நாலாண்டிற் சாபானுக் கிரகம்
தானுண்டா மாண்டஞ்சு தான்செய் தோர்க்கே.()

வருடாந்திர பலன்கள்.

ஓராமற் கோடியோ சனைதூ ரத்தில்
உத்தரங்கள் செவிதனிலே கேட்கும் பாரு
சேராம லாறுண்டில் நூறு கோடி
சேர்ந்தயோ சனைதூர திருட்டி காணும்
யேராம லேழாண்டில் யோசனைதா னெட்டு
யெழும்பிப்போய்த் திரும்பும்பூ சரியாய்த் தானும்
சாராம லெட்டாண்டில் நரைதிரைக ளற்றுத்
தங்கவொளி யருணனைப்போற் சடமாம் பாரே. ()

சடமதுகே சரத்தெழும்பி யாயிரயோ சனைதான்
சஞ்சரித்து மீளுமொன்பா னுண்டில் பாரு
யிடமான பத்தாண்டிற் தேகந் தானும்
யெழும்பியே நினைத்தவிடம் போய்த் திரும்பும்
கடனாகப் பதினொரு மாண்டிற் றானும்
கலந்தளவில் சண்டபா னுப்பிர காசம்
அடிமூல முதற்றுவாத சாந்த மீறு
யடங்காமற் றேற்றுமந்த வொளியிற் கூடே. ()

கூடுவது பனிரெண்டா மாண்டில் பாரு
கூடெழும்பிக் கேசரம்போய்த் திரிந்து மீளும்
ஆடுவது சகலகலை சித்தி யெல்லாம்
ஆடலா மிதுயோக மறிந்தோன் சித்தன்
தேடுவது சித்தருக்கு அனுமாதி சித்து
செயயோக மேதேடல் குளிகை தேடல்
ஓடுவது கேசரத்தி லுலகமெல்லாம் பார்த்து
ஒடுங்குவது சிவஞானத் தொளியிற் தானே.(285)

காயசித்தி வசிசை.

தானென்ற காயசித்தி சொல்லக் கேளு
　　தனிக்கடுக்கா யிருபதுநா ளமுரியிலே கொள்ளு
கோனென்ற கற்றாழை மண்டலந்தான் மூலம்
　　கொள்ளையிலே கடுக்காயு மமுரி கூட்டு
தேவனென்ற கள்ளிக்காய்ப் பொடியுங் கூட்டி
　　வீறாக மண்டலங்கால் கொண்டு தீர்ந்து
சானென்ற உடம்பிலுள்ள பெண்ணெய்சுண்ணங் களிம்பு
　　சட்டரசம் போய்த்தேகந் தங்க மாமே. (286)

வல்லாரை மிளகுக் கற்பம்.

தங்கமென்ற வல்லாரை கொண்டு வந்து
　　தனியுலர்த்திக் காடியிலே களஞ்சி கொள்ளு
பங்கமென்ன சடத்திலுள்ள தோசம் போகும்
　　பாரப்பா யிருகாலங் கொண்டு தேரு
சிங்கம்போல் பெலமாகு மண்டலந்தான் கொண்டு
　　தீர்ந்தபின்பு அஞ்சஞ்சாய் மிளகை யேத்திப்
பொங்கமென்ற அமுரியிலே மண்டலந்தான் கொள்ளு
　　புகழான யிருநூறு மிளக தாச்சே. (287)

ஆச்சப்பா ஐயைந்தா யமுரிதனி லிறக்கி
　　அழகாக மிளகுண்டு வருகும் போது
போச்சப்பா வெட்டைசற்றே மீறிற் றானல்
　　புளித்தபசு வின்தயிரை யொருநாள் கொள்ளு
நீச்சப்பா நீர்க்கடுப்புப் புகைச்சல் கண்டால்
　　நீருடனே மிளகுருகு யெட்டொன்றாய்க் காய்ச்சி
வாச்சப்பா பாக்களவு வெண்ணெய் போட்டு
　　மாலையிலே மூன்றுநாள் கொண்டு தீரே. (288)

கரந்தை சீந்திக் கற்பம்

கொண்டபின்பு கரந்தைதனைச் சூர ணித்துக்
　　கூர்ந்துபொடி யொன்றுக்குக் காற்படிநற் சீனி
பண்டதுவைக் கலந்துவைத்து வெருகடிதேன் குழைத்து
　　பாங்காக யிருவேளை மண்டலந்தான் கொள்ளு

மண்டுநல்ல சீந்திஅடித் தூண்டாய்க் கொண்டு
வந்துமேற் றோல்சீவி நறுக்கியதை யுலர்த்தி
கண்டுபொடி செய்துநா லதனுக் கொன்று
கற்கண்டு கலந்துநெய் தேனி லுண்ணே. (289)

உண்ணப்பா மிளகினுக்கு வாதகபஞ் சூலை
ஒடுங்காத மேகம்சில் விடங்குட்ட மூறல்
விண்ணப்பா சோகைசுர மஸ்திசுர மாறல்
மேல்வாய்வு தாகமந்த நித்திரையுந் தீரும்
கண்ணப்பா சீந்திக்கு மூலவெட்டை மேகம்
கபாலவெட்டை காந்தலெரி வேரடிப் போகும்
பெண்ணப்பா காந்தைக்கு பித்தவெறி கபால
பித்தமா மலபித்தம் கிரமை போமே. (290)

பஞ்சமூலிகைக் கற்பம்

ஓமப்பா விதுகடந்து கரிய நீலி
புகழான கருங்காக்கை பொற்றலைவல் லாரை
வேமப்பா வெண்காக்கை யஞ்சும் நேராய்
மேலுலர்த்தித் தான்பொடித்து வைத்துக் கொண்டு
பாமப்பா பாலைவிட்டு அரைத் துருட்டிப்
பாக்களவு பாலதனிற் குளித்துக் கொள்ளு
தாமப்பா மண்டலந்தா னிருபோதுங் கொள்ள
சரீரத்தி லுள்ளவிடந் தானே போமே. (291)

போகாத விசபாண்டு வீக்கம்நீர்க் கட்டு
புகழான காயாலே சோகைசுர சுவாசம்
யேகாத மூலவலி கைகால் வீக்கம்
யெழும்பாத பாண்டுபித்தம் பிடரிச் சூலை
வாகான நோய்களெல்லா மாறிப் போகும்
வண்டோடு போலுமயிர் நரைதிரையு மாறி
சாகாத தங்கம்போ லுடலு மாகும்
சமத்தாகப் பின்புகொள்ளுங் கற்பங் கேளே. (292)

கோங்கின்பூக் கற்பம்.

கேளப்பா கோங்கின்பூ கொண்டு வந்து
கெடியாக நிழலுலர்த்திப் பொடித்துக் கொண்டு
வாளப்பா நாலுக்கு ஒன்றே சீனி
மாட்டியே கலந்துகொண்டு நெய்யிற் கொள்ளு

மீளப்பா மண்டலந்தான் கொண்டா யானால்
மேனியது பொன்னிறமாம் பொற்களையா முகங்கள்
நாளப்பா உதரவலி யாமை சூலை
நரம்பெரிவு யனல்வாத மோடிப் போமே. (293)

மூன்று மூலிகைக் கற்பம்.

போனபின்பு யின்னமொரு கற்பங் கேளு
புகழான திருமேனி சிறியசெருப் படையும்
மானகருங் கரிசாலை மூன்றும் வேரும்
அடைவாகச் சூரணித்துச் சமனாகக் கலந்து
காணில்வாழ் கற்கண்டு நாலத் தொன்று
கலந்துவெரு கடிதேனில் நெய்யிற் கொள்ளு
மானமுட னிருகாலு மண்டலந்தான் கொள்ள
மந்தமதி மந்தபுத்தி மயக்கம் போமே. (294)

மயக்கம்போம் லோகமெல்லாம் வசிய மாகும்
மணமுண்டாங் குணமுண்டா மயக்கம் போகும்
மயக்கபித்தம் சோகையெரி பித்தநீர்க் கட்டு
மலபந்தம் யாவற்றும் நீங்கிப் போகும்
மூயக்குபித்த வெறிமூர்ச்சை மாறு மாறும்
மூதறிவா மேனிகண்கள் சிவப்பு மாகும்
தியக்கம்போம் காமப்பால் மிகவுண் டாகும்
ஸ்திரீகளுட வாசனையிற் சேராமல் நில்லே. ( )

பொற் கொன்றைப்பூக் கற்பம்.

நில்லப்பா யின்னமொரு கற்பங் கேளு
நிலையான பொற்கொன்றைப் பூப் பொடித்து
வல்லப்பா ஒன்றுக்கு யெட்டுச் சீனி
மாட்டியே வெருகடிதான் தேனிற் கொள்ளு
நல்லப்பா யிருகால்மண் டலந்தான் கொள்ளு
நாடாது குமரகண்டன் முயல்வலிப்புப் போகும்
கல்லப்பா பதினெட்டு வலிப்பு மாறிக்
கனகம்போற் சடமாகும் காம னாமே. (296)

காமன்போல் வீரியமும் வெகுவா யுண்டாம்
கண்டபெண்கள் தான்மயங்கிக் காலில் வீழ்வாள்
சேமம்போ லவர்கள் முகம் பார்த்தி டாதே
செல்லாது மோகித்து மேலே வீழ்வாள்
யேமம்போல் மனதைநன்று யிறுக்கிக் கட்டி
யிதுதுச்ச மென்றறிந்து யிகழ்ந்து தள்ளி
வாமம்போற் சோதியினி லாசை வைத்து
மயங்காமல் பேரின்ப மருவி யுண்ணே. (297)

உண்ணப்பா ஞான நிட்டை யில்லா மூடர்
ஓகோகோ காயசித்தி யாறு லென்ன
பெண்ணப்பா காண்கையிலே மனந்தான் பற்றும்
பிரியாமற் சையோகஞ் செய்வான் பாவி
கண்ணப்பா மழுங்கிப்போம் சடம்விரிந்து போகும்
காலனிது வென்றறியார் கழுதை மாண்பர்
விண்ணப்பா காயசித்தி யோக சித்தி
விழலாய்ப்போ யுலகத்திற் கடையா வானே (298)

(தேவதைகள் சித்தி கூறல்.)

கடையான பெண்ணுசை காலனென்று விட்டுக்
கலந்தசிவ யோகிக்குக் காயசித்தி யாகும்
உடையாளைப் பூசித்து செயசூதம் வைத்த
உத்தமற்கு வாதசித்தி யுறுதி யாகும்
படையான சூலினியை யுபாசித்த பேர்க்கும்
பரப்பிர்ம ஞானசித்தி பலிக்கும் பாரு
அடையான வாய்வுமன மடக்கிக் கட்டி
ஆசானைப் பெற்றவற்கு யோகசித்தி யாமே. (299)

சித்திசெய்ய ரசம்விட்டுப் பலதுறையும் பார்க்கும்
திருடனென்ற வாதிக்குப் பொன்கா ணாது
யுத்தியதாய்க் குருவன்றி வாய்வுதனை யடக்கும்
யோகியற்குக் கோடிரவி யொளிகா ணாது
சத்தியென்ற தேவியுட பூசைவிட்டுப் பார்க்கும்
சண்டாள வாதிக்கு ரசமா ளாது
மூத்தனென்ற சோதியெழுத் தஞ்சும் விட்ட
மூடருக்கு ஞானத்தின் முதல்கா ணாதே. (300)

காணாத அஞ்செழுத்தாற் பிரணவத்தி னாலும்
காணுமன மடக்கினர்க்கு ஞானசித்தி யாகும்
தோணாத தேவிமூன் றெழுத்தா மூலம்
சோடசையாற் காலடக்கக் காயசித்தி யாகும்
பூணாத வழலையினாற் துருசுவெள்ளை வைத்துப்
போட்டாக்கால் தீயில்ரசம் புகையாமல் நிற்கும்
தோணாத செயரசத்தா லிரும்புமுறை பழுக்கும்
சுந்திரற்கு வாதசித்தி சுருக்கி லாமே. (301)

ஆமப்பா வழலைவிட்டோன் துருசுவெள்ளை யறியான்
அத்துருசு வெள்ளைவிட்டால் பொன்னீ ருது
போமப்பா தங்கபற்பம் விட்டா யானால்
புகைந்துபோம் சூதமுதற் பாசா ணங்கள்
சாமப்பா செயசூதம் விட்டதுறை யெல்லாம்
சாதகமா யொன்றுமுத லைந்து காணும்
காமப்பா புடத்தில்வைக்கப் புகையாய்ப் போகும்
காரியம் போட்டுதேக் கழன்று போமே. (302)

வேம்புக் கற்பம்.

கழன்றஉட லிருகவொரு கற்பங் கேளு
கனவருட மோராயிரந்தான் சென்ற வேம்பு
உழன்றயிலை தின்றாக்கா லினிக்கு மந்த
உட்பட்டை யைத்தின்றால் துவர்க்கு மப்பா
கழங்கமற யிரண்டுதிங்க ளிலையைத் தின்று
கைமுறையா யிரண்டுதிங்கள் கொழுந்து உண்ணு
வழங்கவந்தப் பூவிரண்டு திங்க ளுண்ணு
மக்களே வேரிரண்டு திங்கள் கொள்ளே. (303)

கொள்ளவே திங்களொன்று பிஞ்சு கொள்ளு
கொடுவேம்பின் காயையொரு திங்கள் கொள்ளு
வள்ளவே பழரசத்தை மண்டலமே கொள்ளு
மகத்தான வேரதனிற் றிரிதி வாங்கி
உள்ளவிரை மண்டலந்தான் கொண்டு வந்தால்
ஓராண்டிற் றேகமது வுறுதி யாகும்
கள்ளவிச கடிவாத சூலை சன்னி
கடுத்தசொறி யிருமல்குட்ட முடக்கல் போமே. ()

முடங்களண்ட வாதமுதற் சீத சன்னி
மூளையான தனுவாதம் பச்சை வாதம்
ஒடுங்கிடுமே சூலையட்ட விப்புருதிக் கட்டி
ஒடுங்காத மேகமுடன் வெள்ளை யூறல்
சடங்கள்வலி தந்தமுடன் கபால குட்டம்
சண்டனென்ற வாதகுன்மங் கைகால் வெள்ளை
படங்கமென்ற முரணைவடி பட்டு நொந்தல்
பாரிசநோய் மேதினியிற் பதறிப் போமே. (305)

போகாத திரையற்றுத் தேகந் தானும்
பொற்சிலைபோ லிறுகிப்போம் வண்டு போலாம்
சாகாத நாடியெல்லா முறுக்கு மேறும்
தங்கத்தின் தந்தியைப்போல் முறுக்கு மேறி
வாகான சரீரமது கரித்தோல் போல
வரிசைபரி முதுகதுபோல் அழகுண் டாகும்
வேகாத வச்சிரமாந் தேகந் தானும்
வெங்கலம்போல் தொனியாகும் சிரசு தானே. ( )

சிரசான நூற்றெட்டு மூலி கைக்குச்
சிரோரட்னம் வேம்புக்கு மேலே யில்லை
பரிசுரும்பு யிலேரசத்தைப் பானம் பண்ணிப்
பரையோகஞ் செய்து அன்ன பானம் விட்டு
உரிசைகொண்ட மூலபதாதி வித்துக் கொன்று
உள்ளேகொள் ளாமலுகாந்த காலந் தேறி
வரிசையாய் சமாதிசெய்தா ரெந்தை யய்யா
வாராது விசங்களெல்லாஞ் செப்பி னாரே. (307)

செப்பினார் வேம்பினுட பெருமை யெல்லாம்
தேவிசொல்லக் கேட்டேனென்றார் செகத்தோர் காணார்
ஒப்பிலே வேம்புக்கு மேலே கற்பம்
உலகத்தி லில்லையென்று உரைத்தார் பாரு
தப்பில்லா வேம்புண்ணக் கசக்கும் பாரு
சக்கரைபோ லினிக்கமட்டுஞ் சாதிக்கலாம் பார்
அப்பிரான் தேகமெல்லா மமிர்த மாகும்
அழகான மன்மதன்போ லாகும் பாரே. (308)

வேம்பின் பெருமை.

பாரப்பா வேம்பினுட பிறப்பைக் கேளு
பணியனையன் பாலாழி யமுர்தந் தன்னை
நேரப்பா பெண்ணுருவாய் தேவருக்குப் படைத்தார்
திகரில்லா ராட்சதர்கள் பெண்ணைப் பார்த்து
சாரப்பா மயங்கிநின்று ரசுரர்களி லொருவன்
தானவர்கள் பந்தியில்வந் திருந்தா னப்பா
சேரப்பா தேவருடன் கலந்திருந்த தாலே
திருமாலு மூன்றகப்பை படைத்தான் கேளே.()

படைத்திட்ட திருமாலாம் பெண்ணி னோடு
பருதிமதி யசுரனவ னென்ற போது
உடைத்திட்ட அசுரனவ னமுர்த முண்ண
ஓரடியா யகப்பையினால் வெட்டினார் மால்
படைத்திட்ட யிரண்டாகி ரவி மதிக்குப்
பகையாக ராகுகே துக்கனென்றே சர்ப்பமானார்
அடைத்திட்ட அகப்பையினால் வெட்டும் போது
அவன்வாயா லமுர்தமதைக் கக்கி னானே.(310)

கக்கும்போ தமுர்தம துலிங்கம் போலக்
காசினியில் விழுந்ததுவே வேம்பு மாச்சு
முக்கியமாய்க் கசப்புவந்த தேதென் றாக்கால்
முனையசுரன் வாயில்நின்று வீழ்ந்த தாலே
சக்கியமாய் வேம்புதின்றால் சாவோ யில்லை
சனகாதி நால்வருடன் யானுந் தின்று
அக்கணமே சித்திபெற்ற வேம்பு நேர்மை
ஆரறிவா ருலகததோ ரறியார் காணே. (311)

சிவனார் வேம்பு.

காணப்பா பின்னுமொரு கற்பங் கேளு
கருப்பான சிவனார்தன் வேம்பி னோடு
தோணப்பா வாலுளுவை சமனாய்க் கூட்டி
சுவறயிடித்துப் பூப்புடத்தில் தயிலம் வாங்கி
வீணப்பா சீரகமுஞ் சக்கரையுங் கூட்டி
மீறுமே லேகலந்து காற்களஞ்சே கொள்ளு
ஆணப்பா யிருவேளை மண்டலந்தான் கொள்ள
அய்யமுடன் வாதபித்த மகன்று போமே. (312)

போகாத குட்டமொடு சுரப்பு தேமல்
புகழான கடிவிசங்கள் பதினெட்டு வண்டு
யேகாத யெலிகடிதிமிர் வாத சூலை
யெழும்பாத பாம்புகடி யெல்லாம் போகும்
ஆகாத மேனியுள்ளே யழுக நாற்றம்
அடங்கிப்போய்த் திரையற்று அமுர்த தேகம்
வாகான சிரங்குகுட்டம் தீர்ந்து சென்னி
வச்சிரம்போ லிருக்குமடா மக்காள் தானே. (313)

தூதுவளைக் கற்பம்.

தானான தூதுவளை யிலையி னோடு
தக்கோலம் சாதிக்காய் வாலுளுவை வித்து
மானான பொற்கொன்றைப் பூவி னோடு
வைங்கோல விரையினொடு நிலப்பனைக் கிழங்கு
தேனான கொடுவேலி வேரின் பட்டை
சேர்த்திதனைப் பொடிசெய்து வைத்துக் கொண்டு
ஆனான வெருகடிதான் முள்ப்பன்றி நெய்யில்
அடைவாக மண்டலந்தா னுண்டி டாயே. (314)

உண்ணவே வாத மெண்பதுவுஞ் சூலை
ஒடுங்காத வியாதியெல்லா மொழிந்து போகும்
கண்ணொளியு மேனியொளி யருணன் போலாம்
கதிரொளிபோல் முகமாகும் காய சித்தி
உண்ணு நிலச் சோதியுடன் கெந்தி கூட்டி
ஒடுங்காத ரசமெல்லாங் கால்கால் கூட்டி
அண்ணவே நீலியிலை நீரிற் கொள்ளு
அடங்காத நோயெல்லா மகன்று போமே. (315)

போமப்பா முன்னூறு சூத்திரத்தி னுள்ளே
புகழ்ந்தநூற் றெண்கற்பம் பின்பு கொள்ளு
ஆமப்பா யெண்ணூறு சூத்திரத்தில்
அரைந்திட்ட திராவகத்தை முறையாய் வாங்கி
யேமப்பா யிருப்புமுத லுபரசங்க ளெல்லாம்
ஈயம்போ லுருக்கிநன்றாய்த் தங்கஞ் சேர்த்து
காமப்பா கெந்தியிட்டுச் செந்தூ ரித்துக்
கைமுறையாய்க் கொண்டுரசம் பின்பு கொள்ளே.

கொண்டபின்பு கனைவிருட்சப் பாலை யுண்டு
குளிகைகட்டிச் சாரணைக ளெல்லாந் தீர்த்து
விண்டபின்பு ஆயிரத்தெட் டண்டம் பார்த்து
விளையாடிப் பெரியோரைத் தெரிசித் தேத்தி
கண்டபின்பு பொதிகைக்கென் னிடத்தே வந்து
காயாச மென்னிடத்தே வாங்கிக் கட்டி
தொண்டருடன் கூடியே சுகமாய் வாழ்வீர்
சுகமான காயசித்தி சுருக்க முற்றே. (317)

அகத்தியர் தத்துவம் 300 முற்றிற்று.

---

குறிப்பு:— இந்தச் சாத்திரம் எழுதியிருந்த யேட்டின் மத்தியில் சில ஏடுகள் சிதைந்திருந்தபடியால் பாட்டுகள் தெரியாமல் அவைகளுக்கு இடம் போட்டு விட்டிருக்கிறது. இந்தச் சாத்திரம் வைத்திருக்கும் கனவான்கள் இதிலுள்ள குறை பாட்டுகள் இல்லாததை எழுதியனுப்பினால் அடுத்த பதிப்பில் சேர்த்து அச்சிடலாகும். இப்படிக்கு.

இ. ராம. கு. சன்.